

# ஜ்யோதிஷ ஞான போதினி

(ஜாதக யோகங்கள்)




பிரபல ஜோதிஷர்
பண்டித காழியூர்
ம.ஸ்ரீநிவாஸாச்சாரியார்



"தபோநிதி"
தியாகராயநகர், மதராஸ் - 17.

ஆபீஸ் ஸ்தாபிதம் 1924

ஆசிரியர்: பிரபல ஜோதிஷர், மந்திர சாஸ்திர விற்பன்னர்
**பண்டித காழியூர் ம. ஸ்ரீனிவாஸாசாரியார்**
ஸ்வாமியால் எழுதப்பட்டவை.

## ஜோதிஷ ஞானபோதினி

இதன் விலை ரூ. 2—8—0

இப் புத்தகம் சகலருக்கும் எல்லா காலங்களிலும் பயன்படக்கூடியது. இதில் ஜோதிஷ சம்பந்தமான சகல விஷயங்களும் அடங்கி யிருக்கின்றன. ஜாதக பலன்கள் சொல்லவேண்டிய கிரமம், ஜோதிஷத் தொழிலை நடத்த வேண்டிய விதம், ஜாதக யோக தசா யோக பலன்களுக்குள்ள சம்பந்தா சம்பந்தம், தத்காலிக கோசார கால சக்கிரங்களால் உண்டாகிற நன்மை தீமைகள், பல்வேறு வகையான ராஜ யோகங்கள், அவற்றின் பலா பலன்கள், ஜாதகங்களில் கேமுத்ரம யோகம், ராஜயோக பங்கம், தரித்ர யோக பங்கம், ப்ரதிலக்ன சுபாசுபர்கள் விவரம் இன்னும் அனேக விஷயங்கள் இதில் வெகு விஸ்தாரமாக விவரித்து விளக்கிச் சொல்லப்பட்டுள்ளன.

---

## வாழ்க்கையில் வெற்றி

இதன் விலை அணா 6

7 அணா ஸ்டாம்பு அனுப்புபவர்களுக்கு இப் புத்தகம் புக்போஸ்டு மூலமாக அனுப்பப்படும்.

இதில் மந்த்ர யந்திரங்களைப்பற்றிய பல அபூர்வ விஷயங்கள் அடங்கி இருக்கின்றன. ஆனந்த மயமான இன்ப வாழ்விற்கும் வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கும் மந்த்ர சாஸ்திர விதிகளின்படி கிரமங்கள் இதில் சகலருக்கும் பயன்படும்படியாக வெகு விஸ்தாரமாக விவரித்துக் கூறப்பட்டிருக்கின்றன.

## விவாகப் பொருத்தங்கள்

இதன் விலை ரூ. 1

கல்யாண விஷயங்களில் "பொருத்தம்" என்ற பெயரால் அனாவசியமான சந்தேகங்களைப் பலர் கிளப்பி விடுகின்றனர். இதனால் சகல விதத்திலும் பிடித்தமான விவாகங்கள் பல நின்று விடுகின்றன. ஆகையால் விவாகப் பொருத்தங்களைப் பற்றிய உண்மையை அனைவரும் அறிவது மிகவும் அவசியம். வதூவரர்களின் ஜாதக யோகங்கள் பரஸ்பரம் எப்படி இருக்கவேண்டும்? பொருத்தம் பார்க்க வேண்டிய முறை, முகூர்த்தத்தை நடத்த வேண்டிய காலம், வேளை, லக்னம் முதலிய விவரங்கள், மற்றும் ஜோதிஷத்தின் பெயரால் நடத்தப்படும் பல வகையான மோசடிகள் மிச்ருபேதங்கள் கிர்த்ரிமங்கள் வரதக்ஷிணை-கன்யா விக்கிரியம் முதலிய எல்லா விஷயங்களும் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. ஜோதிஷ சாஸ்திரப் பயிற்சியோ, தேர்ச்சியோ இல்லாதவர்களும் வெகு எளிதில் புரிந்து கொள்ளலாம். ஒவ்வொருவரிடமும் அவசியம் இருக்க வேண்டிய நூல்.

வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்

---

ஜோதிஷ ஸித்தாந்தம் ஸ்திரீ-புருஷ ஸாமுத்ரிகா லக்ஷண பலன்கள்—(அச்சில்)

விலாசம் :—

பிரபல ஜோதிஷர்,
பண்டித காழியூர் ம. ஸ்ரீனிவாஸாசாரியார்,
தபோநிதி,
தியாகராயநகர், மதராஸ்-17.

இவ் வாசிரியரால் எழுதப்பட்டு பிரசுரிக்கப்பட்டு வருகிற பல ஜோதிஷ கிரந்தங்களின் விவரங்களை நேரிலோ தபால் மூலமாகவோ ஆசிரியரிட மிருந்து தெரிந்து கொள்ளலாம்.

Printed at the Liberty Press, G.T., Madras. Q. H. Ms. 49
for K. M. Srinivasachariar, Madras, P. H. Ms. 497

இவ் வாசிரியரால் எழுதப்பட்டு
பிரசுரிக்கப்பட்டு வருகிற பல ஜோதிஷ
கிரந்தங்களின் விவரங்களை நேரிலோ
தபால் மூலமாகவோ ஆசிரியரிடமிருந்து
தெரிந்து கொள்ளலாம்.

Printed at the Liberty Press, G.T., Madras. Q. H. Ms. 499
for K. M. Srinivasachariar, Madras, P. H. Ms. 497

# ஜோதிஷ ஞான போதினி

## எனது நோக்கம்

---

## முக்கிய கவனிப்பு

ஜாதக யோகங்கள் என்னும் இப் புத்தக விஷயமாக
எனது நோக்கம் யாது இதை எம்மாதிரியான மனோபாவ
முடன் எப்படிப்பட்ட கொள்கையுடன் எழுதியிருக்
கிறேன் என்பதைப்பற்றி ஆரம்பத்திலேயே சில வார்த்
தைகள் தெரிவித்துக் கொள்வது சகலருக்கும் பரம உப
யோகமாக விருக்குமென நான் எண்ணுகிறேன். ஆகவே
இவ்விஷயமாக சில கூறுகிறேன்.

ஜோதிஷ விஷயமானது உலகில் சகல நிலையிலுள்ள
வர்களுக்கும் பயன்படக்கூடிய சாஸ்திரம். விரக்தர்கள்,
வைராக்ய நிலையிலுள்ளவர்கள், யோகிகள், சன்யஸ்தர்
கள், தபஸ்விகள் முதலாக உலக மாயையால் பீடிக்கப்
பட்டு ஸம்ஸார ஸாம்ராஜ்யத்தில் உழல்பவர்களுட்பட
லோக வ்யவகாரங்களில் ஈடுபட்டு வியாபார உத்யோகாதி
களில் இராப் பகலாக உழைத்துப் பொருளீட்ட முயற்
சிப்பவர்கள் போன்ற பலதரப்பட்ட மேதாவிகளான
கிரகஸ்தர்கள் வரை சகலருக்கும் எல்லா காலங்களிலும்
அனேக வகைகளில் பயன்படக் கூடியது ஜோதிஷ சாஸ்
த்ர விஷயம் என்பது எனது அபிப்பிராயம்.

இதை அனுஸரித்தே தற்கால உலகில் சகலநிலை
யுள்ளவர்களுக்கும் பயன்படும்படியாக அனேக விஷ
களை நான் இதில் தொடர்ச்சியாக எழுதியிருக்கிறேன்

ஏனெனில் நான் ஆரம்பத்திலேயே தெரிவித்
கொண்டுள்ளபடி ஜோதிஷமானது ஒரு சாரா
மாத்திரம் பயன்படக் கூடிய சாஸ்திரமல்ல. ஸர்வ
கள் முதல் ஸாமான்யர்கள் வரை சகலருக்குமே
சாஸ்திரமானது பலவகைகளில் ஸதாஸர்வ கா
லும் பயன்படக்கூடியதாக விருக்கின்றது.

ஆகையினால்தான் இதை நான் ஒரு நூதன
யில் இதுபோல் பலருக்கும் பயன்படும்படியா
வ்யவகாரங்களை யொட்டி வேண்டுமென்றே பல
விஷயங்களைக் குறிப்பிட்டு இப்படி எழுதியிரு
இதை விசேஷக்ஞர்கள் குறையாக பாவியாமல்
கொள்ள வேணுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

தற்கால உலக நிலையில் ஜோதிஷ சா
அதற்குரிய உன்னத ஸ்தானத்திலில்லை. மிக
கிடக்கிறது. இப்படியுள்ள ஒரு சாஸ்திர
விளக்கிக் கூறி இதன் விஷயம் அனைவருக்கு
யாக ஆரம்ப புத்தகமாக அரிச்சுவடியைப்
எழுதவேண்டில், இதில் நான் எழுதியுள்ள
வாக எழுதினால்தான் இக்கால நிலையில்
கேனும் இது பயன்படுவதாகவிருக்கும்
அபிப்பிராயம்.

இப்படிக்கின்றி ஜோதிஷ விஷயங்க
களிலுள்ளபடி ஆரம்பத்திலேயே கேந்தி
மூலத்ரிகோணம், பணபரம், ஆபோ
ஸ்வக்ஷேத்திரம், வேதகன், போதகன்,
சுக பாக்யாதிபதி, பஞ்சம ராஜ்யாதி

ஆனால் ஜோஸ்ய விஷயத்தை இதுபோல் செய்வது ஸாத்ய மில்லை. தவிர அனேக கலைகளுக்கு இதுபோன்ற ரத்னச் சுருக்க கிரமங்கள் ஒத்துவரமாட்டாது. அதிலும் ஜோதிஷத்தித்திற்கு இம் முறையானது எவ்வகையிலும் கிஞ்சித்தும் பயன்பட மாட்டாது.

ஆகையினால்தான் இதில் விஷயத்தை இப்படி வளர்த்தியாக எழுதியிருக்கிறேன். தற்கால உலகம் ஏரோப்ளேன் வேகத்தில் பறந்துகொண்டிருக்கிறது. இரட்டை மாட்டு வண்டி வேகத்தில் ஊர்ந்துகொண்டிருக்கவில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இதை நான் அறியாமலில்லை. இதற்குத் தக்கபடியே இக்காலத்திலுள்ளவர்களும் எந்த ஒரு விஷயத்தையும் ஒயர்லெஸ்வேகத்தில் சில நிமிஷங்களில் தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள் என்பதும் எனக்கு விளங்குகிறது. மேலும் தற்காலத்தியவர்களில் இதுபோன்றவைகளுக்கெல்லாம் அனேகருக்கு அவகாசமே கிடையாது. இப்படியெல்லாமுள்ள நிலையில் ஜோதிஷ சாஸ்திர விஷயத்தை இரண்டு நிமிஷத்தில் சகலரும் தெரிந்துகொண்டு விடும்படி எழுத என்னால் முடியவில்லையே என்பதில் எனக்கும் மிகவும் வருத்தந்தான். ஆயினும் இதைவிட இவ்விஷயத்தை வேறு விதமாக எழுதுவது ஸாத்யமில்லை என்பதை எனது ஜோதிஷ ஆஸ்திகர்கள் அனைவர்க்கும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இதிலுள்ள விஷயங்களைப் படிக்க விரும்புபவர்களில் அபூர்வமாக ஒரு சிலருக்கேனும் ஆஸ்தையும் அவகாசமுமிருப்பின் சற்றுப் பொறுமையுடன் அவர்கள் இதிலுள்ள விஷயங்கள் பூராவையும் ஒன்றுக்குப் பத்து தடவையாகப் படித்துப் பயன்பெறலாம்.

எப்மாதிரியான ருசியுடையவர்களுக்கும் படிக்க இதில் விஷயமிருக்கின்றது. யார் யாருக்கு எவ்வெவ்

கூடியதாக அவ்வளவு எளிதாகவில்லை. ஜோதிஷ விஷயங்களில் பலவற்றை முதலில் கிரமப்படி கற்றுத் தேர்ந்த பிறகே அவ்விஷயங்களின் மஹத்வம் தத்வம் எப்படிப்பட்டதென்பதும் அவைகள் எவ்வளவு உபயோககரமானவை, எவ்வளவு உயர்வானவை என்பதும் விளங்கக் கூடியதாக விருக்கின்றது.

தற்காலத்திய நாகரிக படிப்பில் தேர்ந்துள்ள நிபுணர்களில் பலருக்கு ஜோஸ்ய சாஸ்திர விஷயமென்றாலே இதோர் விஷம்போல் தோன்றுகிறது. இதற்குக் காரணம் என்னவெனில், "அனப்யாஸே விஷம் சாஸ்திரம்" என்றபடி எந்த சாஸ்திரத்தில் யாருக்கு பரிசயமும் பாண்டித்யமும் பூர்ணமாகவில்லையோ அவர்களுக்கு அந்த சாஸ்திர விஷயம் விஷமாகத் தோன்றுவது சகஜந்தான். இது சாஸ்திரத்தின் குற்றமல்ல. இவர்களுக்கு அந்த சாஸ்த்ர விஷயம் என்னவென்பது கிஞ்சித்தும் தெரியாமையே தான் இதற்குக் காரணமாகும்.

காலதேச வர்த்தமானங்களை யொட்டிப் பார்க்குமளவில் தற்காலநிலையில் ஜோதிஷ சாஸ்திரத்தின் மஹிமை எப்படிப்பட்டதென்பதை அனைவர்க்கும் விளங்கும்படி செய்யவேண்டில் இதற்கு ஜோதிஷ மூல கிரந்தங்களிலுள்ள விஷயங்களை அப்படியே மொழிபெயர்த்து வெவ்வேறு பெயர்களுடன் புதிது புதிதாக ஜோஸ்ய புஸ்தகங்களை எழுதிக்கொண்டிருப்பது எவ்வகையிலும் பயன்தருவதாக விராதென நான் எண்ணுகிறேன்.

இப்படி பலரால் எழுதப்பட்டுள்ள ஜோஸ்ய புஸ்தகங்கள் இதுவரையிலுமே எவ்வளவோ வெளிவந்துள்ளன. அவைகளால் ஜோதிஷ சாஸ்திரத்திற்கோ ஜோதிஷ அபிமானிகளுக்கோ எவ்வித பயனும் பிரயோஜனமும் இருப்ப



தாகவோ அல்லது இனியேனும் உண்டாகலாமென்றோ எனக்குத் தோன்றவில்லை.

ஆகையால் தற்காலநிலையில் ஜோதிஷ சாஸ்திரத்தை உலகில் ப்ரகாசிக்கச் செய்யவேண்டும் என விரும்புபவர்கள் அல்லது இதுபோல் செய்ய முயற்சிப்பவர்கள் இதற்கான யோக்யதாம்சமுள்ளவர்கள் அவர்கள் யாராயினும் சரியே அவர்கள் ஜோஸ்ய சாஸ்திர மூல கிரந்தங்களிலுள்ள விஷயங்களை அப்படியே மொழிபெயர்த்து புத்தகங்கள் எழுதுவதாயின் அது முற்றிலும் தவறான அபிப்பிராயமும் வீண் உழைப்புமாகும்.

ஏனெனில், ஜோதிஷ சாஸ்திர மூல கிரந்தங்களிலுள்ள விஷயங்களே எப்போதைக்கும் நமக்குப் போதுமானவை. அவை ஒவ்வொன்றும் சிரஞ்சீவித்வம் வாய்ந்தவைகளாயும் நமக்கு அவ்விஷயங்கள் எவ்வளவு காலத்திற்கு வேண்டினும் எத்தனை யுகங்களுக்கு வேண்டுமானாலும் பயன்படக் கூடியவைகளாயும் பலன்தரத் தக்கவைகளாயுமிருக்கின்றன. ஆகையால், அவற்றை மாற்றவோ, திருத்தவோ வேண்டிய அவசியமே கிடையாது. அவை என்றென்றைக்கும் அப்படியே இருக்கலாம். அவற்றிலுள்ள விஷயங்களை அப்படியே ஆதாரமாக வைத்துக் கொண்டு அவ்விஷயங்களின் ஸாராம்சங்களை நன்கறிந்து தற்காலத்தியவர்களுக்கு அவ்விஷயங்கள் பயன்படும்படிக்கும் நாம் சொல்லும் விஷயங்கள் அவர்கள் மனதில் பதியும்படிக்கும் ஜாதக பலன்களைச் சொல்லி வந்தால் போதுமானது. இப்போதியநிலையில் இப்படிச் செய்வதுதான் யுக்தம்.

தற்கால உலக மாறுதலின் காரணமாக அதாவது சமீபத்தில் ஸ்வதந்த்ரம் கிடைத்துள்ளதன் பயனாக அனேகருக்கு தங்கள் வருங்கால பலன்கள் இனி எப்படிப்பட்ட

தாக விருக்கும் என்பதை தங்கள் ஜாதகங்களைக்கொண்டு
ஜோஸ்ய சாஸ்திர மூலமாகத் தெரிந்துகொள்ள வேண்டு
மென்கிற ஒரு அவா இப்பொழுது உலகில் அதிகமாக ஏற்
பட்டுள்ளது. பலர் ஜோஸ்யம் பார்க்க விரும்புகிருர்கள்.

இப்படிப்பட்டவர்களில் ஒரு சில படித்த மேதாவி
கள் இதற்கு என்ன செய்கிருர்களெனில், தாங்களே தங்
கள் ஜாதக பலனை ஜோதிஷ சாஸ்திர மூல கிரந்தங்களைக்
கொண்டு தெரிந்துகொண்டு விடலாமென நினைக்கிருர்கள்
இதுதான் சரியான முறை என்று இப்படி ஒரு முடிவிற்கு
வந்துவிடுகிருர்கள். இதற்குக் காரணம் என்னவெனில்
ஜோதிஷர்கள் நம்மைவிட எவ்விதத்தில் மேதாவிகள்
அதிகமாக விஷயந் தெரிந்தவர்கள் என்கிற ஒரு துர் எண்
ணந்தான் இவர்களை இதுபோல் செய்யச் செய்கிறது.
இது காலவித்தியாசத்தின் கூத்தே யன்றி வேறென்று
மில்லை. உடனே இப்படிப்பட்டவர்கள் இதற்கு என்ன
செய்கிருர்கள் எனின், ஜோஸ்ய சாஸ்திர மூல கிரந்தங்
களில் சிலவற்றைத் தருவித்து அதிலுள்ள விஷயங்களை
அங்குமிங்குமாகப் படித்துவிட்டு தங்கள் ஜாதகங்களை
வைத்துக்கொண்டு மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்
கும் முடிச்சுப் போடுவதுபோல் பலன்களை அர்த்தம்
செய்து கொள்ள ஆரம்பித்துவிடுகிருர்கள். இப்படிப்
பார்க்கும் பலன்கள் ஒன்ருவது பொருத்தமாகவோ சரி
யாகவோ இருப்பதில்லை. பலன்கள் ஒத்து வருவதில்லை.
இதற்குக் காரணம் சாஸ்திரத்தில் சொல்லியுள்ள விஷயத்
தின் பிசகல்ல. இவர்கள் அதை அர்த்தம் செய்துகொள்
வதிலுள்ள விபரீதந்தான். இதை இப்படிப்பட்டவர்களில்
அனேகர் உணர்வதில்லை.

இப்படிப்பட்டவர்களுக்கு ஏதோ ஓர் கலையில் ஜோஸ்
யத்திற்குச் சம்பந்தமில்லாத ஒரு சாஸ்திரத்தில் நல்ல பாண்



டித்யமிருக்கிறது.இதுவிஷயம்என்னவோ வாஸ்தவந்தான்.
இதனுல் இவர்கள் தங்களை சகல கலைகளிலுமே வல்லவர்க
ளென்று நினைத்துக்கொண்டு இப்படி செய்யில் இது யாரு
டைய குற்றம் என்பதை இவர்கள் நன்கு யோசிக்கவேண்
டும். இப்படிப்பட்டவர்களில் அனேகர் இதைப்பற்றி
யோசிப்பதே கிடையாது. இதுபோல், ஜோதிஷ சாஸ்தி
ரத்தைக் கொண்டு தங்கள் ஜாதக யோக பலாபலன்களைப்
பார்த்துவிட்டு இவர்கள் ஏமாற்றமடைகிருர்கள். இப்ப
டிப்பட்டவர்களால் ஜோஸ்ய சாஸ்திரத்திற்கு விளையும்
அனர்த்தம் கொஞ்சநஞ்சமல்ல. இப்படிப்பட்டவர்கள்
தங்கள் பிசகை உணராமல் என்ன சொல்லுகிருர்கள்
"ஜோஸ்ய விஷயத்தை நான் பூராவும் படித்துப் பார்த்து
விட்டேன். இந்த சாஸ்திரம் எதற்குமே ப்ரயோஜன
மில்லை. அதில் ஒன்றையும் நாம் சரிவர புரிந்துகொள்ள
வும் முடியவில்லை. விஷயமும் விளங்குவதில்லை. பலன்
களும் இதில் சொல்லியுள்ளபடி ஒத்து வருவதில்லை" என்
கிருர்கள். இதனுல் இந்த சாஸ்திரத்திற்கே ஓர் அவமதிப்
பும் கௌரவக் குறைவும் அபவாதமும் ஏற்படுகின்றது.

உதாரணமாக, ஜோதிஷ சாஸ்திரத்தில் சனி என்கிற
ஒரு கிரகமானது கருப்பான ஓர் நாற்கால் ஜீவனைக் குறிப்
பிடுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். இது
யானையாயுமிருக்கலாம் எருமையாயு
மிருக்கலாம் கரடியாயும் இருக்கலாம். இதை ஜாதகங்
களில் சனி இருக்கும் நிலைமையையும் வலிமையையும்
அறிந்து சமய சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி இது
எப்படிப்பட்ட மிருகமாக விருக்கலாம் இருக்கக்கூடும்
என்பதை யூகித்து ஜாதகர்களுக்குப்
பொருந்தும்படி பலனைச் சொல்லவேண்டும். இதற்குத்
தக்கபடி இதனுலான யோகாவயோக பலன்களையும்

கருதும் ஒரு அரசாங்கமானது ஜோதிஷ சாஸ்திரத்திற்கு
எவ்விதமான ப்ரதானத்வமும் அளிக்காமலிருப்பது எவ்
வகையில் ஞாயமாகும் என்பது என் போன்றவர்களுக்கு
விளங்காத புதுமையாகத் தானிருக்கிறது.

இந்த மண்ணாங்கட்டிகளையும் பானை ஓடுகளையும் க
மண்களையும்விடவா ஜோதிஷ சாஸ்திரம் மட்டமானது
என்னே உலகம் என்னே அறியாமை! இந்நிலை அவசிய
மாறியே தீரவேண்டும். அப்பொழுதுதான் உலகில் நி
தரமான க்ஷேமமும் ஸந்துஷ்டியும் உண்டாக முடியும்.

தற்காலத்தில் ஏதேதோ கலைகளை எல்லாம் சேர்
ஒரு பெரிய களஞ்சியமாக ஒரு சிலர் எழுதப் போவ
ஒரு கூற்று இருந்துவருகிறது. அதில் எந்தெந்த
திர விஷயத்தைப் பற்றி யார் யார் எப்படி எல்லாம்
தப் போகிறார்கள் என்பதைப் பற்றிய ஒரு லிஸ்டை
நான் பத்திரிகைகளில் பார்க்க நேர்ந்தது. அதில்
குழுவினர் அனைவரும் ரொம்பவும் முன் யோசனை
வெகு ஜாக்கிரதையாக ஜோஸ்யம் என்கிற பதமே
வராதபடி கவனித்து வாக்யங்களை வெகு அழகாக
திருக்கிறார்கள். வானசாஸ்திரம் என்று ஒன்றை
குறையாக அதில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இப்படி இவர்கள் குறிப்பிட்டுள்ள இந்த வா
திர விஷயம்கூட ஜோதிஷத்திற்கு பயன்படும்
விஷயமாக இதில் ஏதுமிருக்குமென்று நாம்
முடியவில்லை. ஏனெனில், வான சாஸ்திரத்தை
படையாகக் கொண்டது தான் பஞ்சாங்க
இதைச் சரியானபடி நிர்ணயம்செய்து இந்த
தான் சரியானது என்னும்படியாக அரசாங்க
யித்து இதைத் தவிர மற்றவைகள் யாவும் பி
தான் அனைவரும் அங்கீகரிக்கவேண்டும் என்

விதத்தை அறிதல்போலும். மருந்தைப் போன்றுமாகும். இவை இரண்டினுதவியுமிருந்தாலல்லது இதனால் யாதொரு ப்ரயோஜனமும் கிடையாது.

இப்படியுள்ள ஒரு விஷயத்தில் வானசாஸ்திரம் என்பதை மாத்திரம் ஏதோ ஓர் வகையில் வைத்துக்கொண்டு ஜோதிஷ விஷயம் பல பாகம் ஜாதக பலன்களைச் சொல்லும் கிரமமென்பதையே ஆராயாதிருந்துவிடில் இதற்கான ஆராய்ச்சியே ஏதுமிராவிடின் இதனால் யாருக்கு என்ன அனுகூலம் விளைய முடியும். இவ்விஷயம் மேதாவிகள் யோசித்தற்குரியதாகும்.

என்னைப்பற்றிய வரையில் ஜோதிஷத்தில் என் பாண்டித்யம் எப்படியேனும் இருக்கட்டும். அதைப் பற்றி யார் எப்படிவேண்டினும் அர்த்தம் செய்யலாம் அதைப் பற்றி எனக்கு யாதொரு கவலையும் கிடையாது. நான் முப்பது வருஷ காலமாக ஜோதிஷத்தைத்தான் தொழிலாகக் கொண்டு ஜாதக பலன்களைச் சொல்லி வருகிறேன். இந்த சாஸ்திரம் அப்படியொன்றும் எவ்வகையிலும் சாமான்யமானதாக எனக்குத் தோன்றவில்லை. நான் எவ்வளவோ விஷயங்களுக்கெல்லாம் பலன் சொல்லியிருக்கிறேன். இப்பவும் சொல்லி வருகிறேன். பலன்கள் இம்மியும் பிசகின்றி சரியாகவிருக்கின்றன. சரிவர நடக்கின்றது. இப்படியுள்ள ஒரு சாஸ்திரத்தை விர்த்திக்குக் கொண்டுவர ஒரு முயற்சியோ இதற்கென ஒரு ஆராய்ச்சி ஸ்தாபனமோ படிப்போ, சர்ச்சையோ இல்லாமலிருப்பதை நினைக்கும்போதுதான் எனக்கு மிகவும் வருத்தமாகவிருக்கிறது.

இது விஷயத்தைக் கற்பதை விட்டுவிட்டு மற்ற கலைகளைப் பலரும் கற்பதானதும், பலவற்றை பள்ளிகளிலும், கலாசாலைகளிலும் கற்பிப்பதானதும் எப்படி இருக்கிறது



எனில், ஒருவன் புதையல்குவியல் மீது உட்கார்ந்து கொண்டு அதன் தன்மை எத்தகையதென்பதை அறியாது தனது பிழைப்பை யாசகம் வாங்கி நடத்த வழி தேடுவது போன்றிருக்கிறது. இது மிகவும் வருந்தத்தக்கதும் அறியாமையுமாகும்.

ஜோதிஷ விஷயம் நன்றாகத் தெரிந்தவர்கள் நமது நாட்டில் இப்பவும் எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களில் பலர் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்வதை விரும்பாதவர்களாய் ரொம்பவும் அடக்க ஒடுக்கமாகவிருக்கிறார்கள். ஒரு சிலரைப்போல் எடுத்ததற்கெல்லாம் அதாவது தங்களுக்குச் சம்பந்தமில்லாதவற்றிற்கெல்லாம் கூட முந்திரிக்கொட்டைபோல் முன் வந்து நிற்பவர்களாகவில்லை. இதனால் பலருக்கு ஜோதிஷம் நன்றாகத் தெரிந்தவர்களே நம் நாட்டில் இல்லை என்றுகூட தோன்றுகிறது இவ்வபிப்பிராயம் முற்றிலும் தவறாகும்.

தற்கால அறிவாளிகளில் அனேகர் ஜோதிஷ சாஸ்திரம் என்னவோ சரியானதுதான் ஸார் அது ரொம்பவும் நல்ல சாஸ்திரந்தான் ஸார். ஆனால் அதை சரியாக அறிந்து சொல்லும் ஜோதிஷர்கள் தான் கிடையாது என்கிறார்கள். இப்படியொரு கோஷ்டி உண்டு. இந்த சாஸ்திரத்தை எவ்வெவ்வகையில் இவர்களில் எத்தனை பேர்கள் ஆராய்ச்சிசெய்து பார்த்தார்கள்? அதில் எந்தெந்த விஷயம் இவர்களுக்கு சரியாக வராமல் போய்விட்டது? என்பதற்கு இவர்களிடம் யாதொரு அத்தாக்ஷியும் கிடையாது. இதில் எவ்வளவு அறியாமை நிறைந்திருக்கிறதென்பதைக் கவனியுங்கள். இது விஷயம் ஒருவன் கல்யாணமே செய்துகொள்ளாமலிருக்கும்போது அவனுக்கு ஸந்ததிகளே உண்டாகவில்லையே ஸார் என்று வியஸனிப்பது போன்றல்லவா இருக்கிறது.

இவ்வளவு அருமையான ஒரு சாஸ்திரத்தை ஆராய்ச்சிசெய்து விஷயங்களை கண்டறியாமலிருப்பது உலகிற்கே ஒரு பெரிய நஷ்டமாகும் இதை இதுவரையிலுமே அறிந்து செய்திருக்கவேண்டும். போனது போகட்டும் இனியேனும் இம்மாதிரியான தவறை தொடர்ந்து செய்துக்கொண்டிராமல் உடனடியாக இந்த சாஸ்திரத்தை முக்ய ப்ரதானமாக எல்லா பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் கற்பதற்குவேண்டிய சகல ஏற்பாடுகளையும் அரசாங்கத்தார் கட்டாயமாகச் செய்யவேண்டும்.

வித்யா இலாகாவில் இவ்விஷயத்திற்கு முக்ய ப்ராதான்யம் இருந்தே யாகவேண்டும். அப்பொழுதுதான் அந்த நிர்வாகத்தை நாம் கண்ணுள்ள ஸ்தாபனம் என்று கருத முடியும். என் ஜீவனோபாயத்திற்காக நான் இதைச் செய்யவேண்டுமென்று வற்புறுத்துவதாகவோ சொல்லுவதாகவோ யாரும் நினைக்கவேண்டாம்.

இந்த சாஸ்திரத்தின் மஹிமையை நன்கறிந்து இதனாலான பலனை சகலரும் பயன்படுத்திக் கொள்வாராயின் உலகில் சகல க்ஷேமங்களும் விர்த்தியடையும். ஒவ்வொருவரும் மனுஷ்ய கந்தர்வர்கள்போல் இன்புற்று வாழலாம். இவ்வளவு தூரம் பலனடைய ஜோஸ்ய சாஸ்திரத்தில் விஷயமிருக்கின்றது. எனவே அரசாங்கத்தாரும் தனவந்தர்களும் மேதாவிகளும் இதையறிந்து ஜோதிஷ சாஸ்திரத்தை உலகில் ப்ரகாசிக்கச் செய்ய சகலவிதமான வகைகளிலும் முயற்சிசெய்து ஜோதிஷக் கல்வியை அனைவரும் கற்றுப் பலனடையுமாறு செய்ய வேணுமாய் பிரார்த்திக்கின்றேன்.

இவ்விஷயமாக என்ன செய்யவேண்டும் எப்படிச் செய்தால் இந்த சாஸ்திர மூலம் சகலரும் வெகு சுலப[illegible]தில் பலனடைவது ஸாத்யம் என்பதைப்பற்றி யாரு

கள் புரியலாம். துவாதச பாவ பலன்களில் ஏதேனும் ஒரு பாவத்தைப்பற்றி பலா பலனை நிர்ணயிக்க வேண்டில் அதற்கு சாஸ்திர ப்ரமாணங்களை குறிப்பிட்டு அதற்குள்ள ஆக்ஷேபங்கள், ஸமாதானங்கள், சந்தேகங்கள், அதற்கான நிவர்த்திகள் இவ்வளவையும் குறிப்பிட்டு இப்படித்தான் பலனை தீர்மானமாகச் சொல்லவேண்டும் என்று நிர்ணயித்துக் கொள்வதற்கான மார்க்கத்தை விஸ்தாரப்படுத்தி அனைவர்க்கும் புரியும்படி சொல்லலாம் அல்லது சிறு சிறு புத்தகங்களாக இதுபோன்ற விஷயங்களை மாத்திரம் தனித்தனியாக எழுதி வெளியிடலாம். இப்படி செய்யின், இந்த சாஸ்திரத்தின் மஹிமை சகலருக்கும் விளங்கும். இத்துடன் இதோர் கரடுமுரடான ஓர் குளறுபடியான சாஸ்திரமல்ல. இது ரொம்பவும் சுலபமாகத் தெரிந்துகொள்ளக் கூடிய சரளமான சாஸ்திரந்தான் என்பது அனைவர்க்கும் விளங்கும். இப்படிப்பட்டவைகளை தற்காலத்தில் உத்தம ஜோதிஷர்கள் செய்துவந்தால் போதுமானது. ஜோதிஷ சாஸ்திரம் தானே உலகில் ப்ரதானத்திற்கு வந்துவிடும்.

தற்காலத்தில் இதுபோன்ற கிரமத்தில் விஷயங்களை விளக்கிக் கூறும் ஜோதிஷ நூல்கள் எதுவும் வகையானதாக இல்லை. இதுவே தான் இந்த சாஸ்திரத்தைப் பற்றிய சகலவிதமான சந்தேகங்களுக்கும் ஜோதிஷ சாஸ்திரத்தைப்பற்றி அனேகர் கொள்ளும் தவறான அபிப்பிராயத்திற்கும் மூலகாரணமாக விருக்கிறது.

இம்மாதிரியான சில சந்தேகங்களை நிவர்த்திப்பதற்கானவற்றை ஜோதிஷர்கள் வெகு சுலபமாகச் செய்யலாம். இவ்வளவு செய்தால் போதுமானது. ஜோதிஷ சாஸ்திரம் தானே உன்னத நிலைக்கு வந்துவிடும்.

துக்கொண்டு பலாபலன்களைச் சொல்லலாம். யோகங்களைத் தெரிந்துகொள்ளலாம். ஜோதிஷ மூல கிரந்தங்களில் சொல்லியுள்ளபடியே பலன்கள் இம்மியும் பிசகின்றி சரியாகவிருக்கும். இதுபோல் இருக்கின்றன. பலன்கள் அப்படியே நடக்கின்றன. இது எனது முப்பது வருட காலத்திய அனுபவமுமாகும்.

இப்புத்தகத்தை நான் ஆரம்ப புத்தகமாகத் தான் எழுதியிருக்கிறேன். ஆகையால், இது ஜோதிஷத்தில் அ, ஆ போன்றதுதான். ஆனால் இதிலுள்ள விஷயங்களை மனதில் வாங்கிக்கொண்டு பலன் சொல்வதற்கே சிலருக்கு சிரமமாகத் தோன்றலாம். இப்படி எவ்வளவோ விஷயங்களைத் தெரிந்துகொண்டுதான் உலகிலுள்ள ஒவ்வொரு ஜாதகங்களுக்கும், தனித்தனியாக பலனை ஒத்துவரும்படி ஜோதிஷர்கள் சகல ஜாதகங்களுக்கும் பலன் சொல்ல வேண்டியிருக்கிறது. இது போல் ஜோதிஷர்கள் ஜாதகங்களுக்குப் பலனைச் சொல்லவேண்டியிருப்பதில் ஜோதிஷர்களுக்கு எவ்வளவு விஷயங்கள் மனதில் ஞாபகத்திலிருக்க வேண்டும். இதற்கு எவ்வளவு நிபுணத்வமும், புத்தி தீக்ஷண்யமும் ஜோதிஷர்களுக்கு இருக்கவேண்டும் என்பதை வாசகர்களே யோசிக்கலாம்.

தற்காலத்தில் ஜோதிஷம் ப்ரகாசிக்காமலிருப்பதற்கு மற்றொரு காரணம் என்னவெனில் நல்ல நிபுணத்வம் வாய்ந்த மேதாவிகளில் பலர் இந்த சாஸ்திரத்தைக் கற்று பலன் சொல்ல முன் வருவதில்லை. இந்த குறையும் சீக்கிரமே நிவர்த்தியாக வேண்டும். இதுவும் இதில் முக்கியமாகும். நல்ல மேதாவிகள் பலரும் இந்தக் கலையைப் பயின்று ஜாதக பலன்களைச் சொல்ல முன்வர வேண்டும். அப்பொழுது தான் இதன் சிறப்பு சகலருக்கும் விளங்கும். இதையும் விசேஷக்ஞர்கள் அறிவார்களாக.

# ஜோதிஷ ஞான போதினி

ஜாதக யோகங்கள் என்னும் இந்நூலிலுள்ள விஷய விவரம்
அட்டவணை

## பொருள் அடக்கம்

களையும் ஆராய்ந்து இருக்கவேண்டும். இவ்விதம் ஜோதிஷ சாஸ்திரத்தை அபிவிருத்தி செய்தவர்கள் எவ்வளவு காலத்திற்கு முன்னால் கணிதத்திலும் சிந்தனா சக்தியிலும் மேன்மை அடைந்திருக்கவேண்டும் என்பது மனித அறிவுக்கு எட்டாத ஒரு விஷயமாகும்.

பூர்வகாலத்தில் மக்களின் தினசரி வாழ்க்கையில் ஜோதிஷம் ஒரு முக்கிய ஸ்தானத்தை வகித்திருந்தது. மக்கள் வருங்கால நன்மை தீமைகளை ஜோதிஷத்தின் உதவியால் அறிந்து அதற்கேற்றவாறு தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டு இன்புற்று வாழ்ந்தனர். இவ்வளவு உயர்ந்த சாஸ்திரம், தான் வகித்துவந்த ஸ்தானத்தை இழந்த காரணம் என்ன? ஜோதிஷர்கள், ஜோதிஷம் கேட்பவர்கள் ஆகிய இரு சாராருமே இதற்குக் காரணம் என்னலாம். ஜோதிஷர்களில் பெரும்பாலோர், இந்த சாஸ்திரத்தை பொறுமையுடன் முற்றும் கற்காமல், தொழில் செய்ய ஆரம்பித்து விட்டனர். ஆரம்பித்த பின்னரும் அவர்கள் இதை மேன்மேலும் விருத்தி செய்ய வேண்டும் என்ற ஊக்கம் எடுத்துக்கொள்ளவில்லை. காலப் போக்கில் மக்கள் வாழ்க்கையின் மாறுபாடுகளுக்கு ஏற்றபடி இந்த சாஸ்திரத்தை உபயோகப்படுத்தி பலன் சொல்லும் முறையைப்பற்றி அவர்கள் சிந்திக்கவில்லை. இதன் விளைவாக, ஜோதிஷம் கேட்பவர்களும் இக்கலையின் மேன்மையை அறியாமல் இதை தூஷிக்கத்தொடங்கி விட்டனர். ஆனால் இன்னமும் உத்தம ஜோதிஷர்கள் சிலரும், ஜோதிஷ அபிமானிகள் பலரும் இருந்து வருகின்றனர். அவர்கள் இருப்பதால் தான் இக்கலை இப்பொழுது இருக்கும் நிலையிலாவது நிற்கிறது. ஆனால் தற்காலத்தில் வெகு சமீப காலமாக ஜனங்கள் இதனிடம் செலுத்தும் ஊக்கத்தைக் கவனிக்கும்போது இது மீண்டும் தனக்குரிய உச்ச



ஸ்தானத்தை வெகு சீக்கிரத்தில் அடைந்துவிடும் என்பதில் சந்தேகமே இல்லை.

இக்கலையின் பெருமையை ஓரளவு அறிந்தவன் என்ற முறையில், இதை இதற்குரிய உன்னத ஸ்தானத்திற்கு மீண்டும் உயர்த்தவேண்டும் என்பது என்னுடைய ஆவல். அந்த அவாவின் விளைவே இச்சிறு நூலாகும். என்னுடைய லக்ஷியம் வெகு தூரத்திற்கு அப்பால் இருக்கிறது என்று என்னுடைய கண்ணுக்குப் புலப்பட்டாலும், அந்த லக்ஷிய பாதையில் இது முதல் படியாக அமையுமானால் என்னாவல் ஓரளவு பூர்த்தியானதாக ஆகிவிடும்.

இப்புத்தகத்தின் முதல் பதிப்பு 1930-இல் வெளிவந்தது. இப்பொழுது சில மாறுதல்களுடன் இது இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது. முதல் பதிப்பை ஆதரித்தவர்களுக்கும் இரண்டாம் பதிப்பை வெளியிடுமாறு தூண்டிய நண்பர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

'சுதேசமித்திரன்' தினப்பதிப்பில் 1934-இல் 'ஜோதிஷ ரஸார்ணவம்' என்ற தலைப்பின்கீழ் என்னால் தொடர்ச்சியாக எழுதப்பட்ட சில வியாசங்களின் சாராம்ஸம் இதில் அடங்கியுள்ளது. ஆகவே 'ரஸார்ணவ' பிரியர்கள் இதை வெகு ஆவலுடன் வரவேற்பார்கள் என்று நம்புகிறேன். அவர்களுக்கு இது மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கவல்லது. எனவே இந்த இரண்டாம் பதிப்பை ஜோதிஷ அபிமானிகள் சகலரும் ஒன்றுக்கு 100 தடவையாகப் படித்து நற்பலனை அடையுமாறு பிரார்த்திக்கிறேன்.

சென்னை : 1947 காழியூர். ம. ஸ்ரீனிவாஸாச்சாரியார்.

ஸ்ரீ :

ஓம்

ஆதித்யாதி நவக்ரஹ தேவதாப்யோ நம:

கிரஹா ராஜ்யம் ப்ரயச்சந்தி
கிரஹா ராஜ்யம் ஹரந்திச |

கிரஹைர் வியாப்தம் இதம்ஸர்வம்
த்ரைலோக்யம் ஸசராசரம் ||

கிரஹங்கள் தாம் அனுகூலமாகில் ராஜ்யத்தைக் கொடுக்கின்றன, பிரதி கூலமாகில் ராஜ்யத்தை இழக்கும்படிச் செய்கின்றன ; ஸர்வ வியாபியான கிரஹங்கள் தாம் மூன்று லோகங்களிலும் பலனளிக்கின்றன.

அர்தார்ஜனே ஸகாய : புருஷாணம் ஆபதர்ணவேபோத :
யாத்ராகாலே மந்த்ரீ ஜோதிஷ மபஹாய நாஸ்த்யபர :

என்கிறபடியே ஜோதிஷ சாஸ்திரமானது தனம் தேடவேண்டிய காலத்தில் ஒருவனுக்குச் சகாயம் செய்வதில் ஆப்தநண்பனைப் போலவும், கப்பலிலிருந்து தவறிக் கடலில் விழுந்தவனுக்குச் சிறிய படகு ஒன்று கிடைத்தது போலவும், யாத்ரா காலத்தில் மந்திரிக் கொப்பாகவும், உபயோகமுள்ளதாகும் என்று மஹரிஷிகளால் சொல்லப்படுகின்றது.

னும் மஹான் 'ஜாதக பாரிஜாதம்' என்ற சிறந்த கிரந்
தத்தையும், மந்த்ரேச்வரர் என்பவர் 'பல தீபிகையையும்,
கல்யாணவர்மன் என்பவர் 'ஸாராவளி' யையும், வெங்
கடேச தெய்வஞ்ஞர் 'சர்வார்த்த சிந்தாமணி' என்பதை
யும், மஹாதேவன் என்பவர் சூத்திர ரூபமாக அமைந்
துள்ள 'ஜாதகதத்துவம்' என்னும் நூலையும் இயற்றி
உதவி யிருக்கின்றனர்.

## ஜோதிஷத்தின் பழமை

வெகு புராதனமான இந்த ஜோதிஷ சாஸ்திரமா
னது கிரேக்கர், பாரவீகர், முகம்மத்தியர், முதலியவர்
களால் ஆதிகாலம் முதற்கொண்டு பரிபாலிக்கப்பட்டு வந்
தது. ஏசுநாதரின் ஜனன காலத்தையும், அவர் அவதா
ரப் பெருமைகளையும், அவர் அவதரிப்பதற்கு முன்ன
மேயே ஜோதிஷர்கள் தெரிவித்துள்ளார்கள். அவர்
களுள் முக்கியமானவர் பாரசிகத்திலிருந்து வந்த அல்ஹா
ஜீம் என்ற நிபுணராவர். இவரே மகம்மதுநபி பிறக்கும்
காலம், அவரது மதம், அவர் பெருமை முதலியவற்றைப்
பற்றியும் எழுதி வைத்திருந்தார். இயூஹின் என்பவ
ரும், ஹியூக் என்பவரும், தாமூர் காலத்திலிருந்த அப்
துல்லா என்பவரும், ஷிவீஹ என்பவரும், மகம்மதிய
ஜோதிஷர்களுள் மிகவும் பெருமை வாய்ந்தவர்கள்.

ரோமாபுரியை ஆண்ட மன்னர்களும் தாங்கள் போர்
முனைக்குப் போகவேண்டிவந்த காலங்களில் ஜய அப
ஜயங்களை ஜோதிஷர் வாயிலாக அறிந்த பிறகே சென்ற
னர் என்று சரித்திர வாயிலாக நாம் அறிகிறோம். அப
லோனியஸ் என்பவர் கீழ்த்திசை நாடுகளுக்கு வந்து
ஜோதிஷம் கற்றுச் சென்றனர் எனவும், அவர் அநே
நூல்களை எழுதியுள்ளார் எனவும் தெரியவருகிறது.

என்ற உண்மையை உணர்வராயின் நம் நாட்டவரும் இச் சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்வர் என்பது நிச்சயம்.

## ஜோதிஷமே ஆதிமதம்

நம் பூர்வீக இந்திய ஜோதிஷ சாஸ்திரம் சரித்திர ஆராய்ச்சிக்கு எட்டாததாக இருந்து வருகிறது. எனவே இந்த சாஸ்திரத்தின் மஹத்வங்களைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறுவது அவசியமாகும்.

ஜகத்ச்ருஷ்டி ஏற்பட்ட நாள் முதற்கொண்டும், நம் இந்துமதம் ஜனித்தகாலத்திலிருந்தும், ஜோதிஷமும் இருந்து வந்ததாகத் தெரிகிறது. சூரிய சந்திரர்களின் கதியையே முக்கிய ஆதாரமாகக்கொண்டு இந்த சாஸ்திரம் ஏற்பட்டுள்ளது. ஆகவே சூரிய சந்திரர்கள் என்று உதித்தார்களோ அன்றே ஜோதிஷமும் உதித்தது என்னலாம்.

இந்த சாஸ்திரம் ஆதித்யாதி நவக்கிரகங்களின் கதியை அனுசரித்து, ராசிகளில் கிரகங்கள் சஞ்சரிப்பதை நக்ஷத்திரங்கள் மூலமாக ஸ்திரமாக அறிந்து சரிவர சகலபலன்களையும் சொல்ல மூலாதாரமாக இருப்பதால் இதற்கு ஜ்யோதிஷம் என்று பெயர் உண்டாயிற்று. மற்றும் சூரியாதி கிரகங்களை ஆதாரமாகக்கொண்டு பஞ்சாங்கங்களில் கிரஹணம், உலகில் கிரககதிகளால் நிகழப்போகிற நல்லவை—கெட்டவைகள் இத்யாதிகளை ரொம்பவும் சரியாக நிர்ணயிக்க முடிவதால் இதற்கு சித்தாந்தம் என்று பெயர்.

சூரிய சந்திரர்களின் கதியை அனுசரித்தே, உதயம், அஸ்தமனம், இரவு, பகல் (அஹோராத்ரம்) இவைகளின் கால அளவை நாம் நிர்ணயித்துத் தெரிந்துகொள்கிறோம். இதற்கொப்ப அந்தந்த வேளைகளில் நாம் செய்யவேண்

வேதசாஸ்திர, வேதாங்க-ஜோதிஷ சாஸ்திர கலா வல்லவர்களான நம் பூர்வாசாரியர்கள், தற்காலத்தியவர்களைப்போல எந்த விஷயத்திலும் அவ்வளவு தீவிரமாக முயற்சி செய்து ஆராய்ச்சியின் பயனாக எதையும் லோகோப காரமாகச் செய்யவில்லை என்று பலர் எண்ணுகிறார்கள். அவர்கள் ஏதோ ஒருவகையில் பூர்வகாலத்தில் தத்துவ விசாரணைகள் வேதாந்த விசாரங்கள் செய்வதும், மூர்த்தி பூஜைகள், விக்கிரஹ ஆராதனம், தேவாலய நிர்மாணம் இத்யாதிகளைச் செய்வதும், புத்தி சூக்ஷ்மமான ஆத்மானுபவ சாதனங்களில் பலனடைய, அதாவது அந்தராத்மாவைத் தரிசிக்க, பலவகைகளில் முயற்சித்தபடியும், ப்ரத்யக்ஷம் பகவத் தரிசனங்கள், புண்ய தீர்த்த யாத்திரைகள், ஜபம், தபம், யோகாப்யாஸம் இவைகளைச் செய்வதும், இத்யாதியோக சாதன நூல்களை இயற்றுவதும், மோக்ஷப்பேற்றின் நிமித்தம் பல யாக யஞ்ஞாதிகளைச் செய்வதுமாகவே தங்கள் காலத்தை கழித்தார்கள் என்று பலர் எண்ணுகிறார்கள். ஆனால் அவர்கள் லோகோபகாரமாகச் செய்தவைகள் எவை என்று இவர்களுக்கு எவ்வாறு புலப்படும்?

நம் பெரியோர்கள் திரிகால பலன்களையும் வேறு எவ்வித சாதனமுமின்றி இயற்கையின் நியதிகளைக் கொண்டு சொல்லக்கூடிய சகுன சாஸ்திரம், சாமுத்ரிகா லக்ஷண பலன்கள், ரேகை சாஸ்திர தத்துவம், பூர்வ புண்ய பரீக்ஷாப் பயிற்சி, வருங்கால உலக க்ஷேமங்களையும் தனி மனிதனுடைய யோகங்களையும் சூரியாதி நவகிரகங்களின் கதிபேதங்களாலறிந்து சரியாக நிர்ணயிக்கக் கூடிய ஜோதிஷ சாஸ்திரம், இவைகளின் மூலமாக சகலருக்கும் எல்லாக்காலங்களிலும் நடக்கப்போகிற பலன்களைச் சொல்லுதல், இன்னும் இதுபோன்ற அநேக விஷ-

தினமும் ஒன்று மாறுகின்றது. எப்படியெனில் இன்று ஆர்மோனியம், நாளை கிராமபோன், அடுத்தபடி ரேடியோ, அதற்கடுத்தபடி, டெலிவிஷன் என்ற படிக்கும்; இன்று ஸ்டீம் இன்ஜின் படிப்பு முக்கியம், நாளை எலெக்ட்ரிகல் மெஷின்படிப்பு அதிமுக்கியம், இதன் பிறகு ரேடியோ சக்தியால் எதையும் செய்யக் கற்க வேண்டியது எல்லாவற்றையும் விட பிரதானம்; இன்று இங்கிலீஷ் படிப்பு, நாளை தமிழ் படிப்பு, பிறகு ஹிந்தி படிப்பு; இப்படி ஒன்று புதிதாக உதயமாவதும் மற்றொன்று, ஏற்கனவே இருந்தது, அப்பொழுதே உடனே அழிவதுமாக உலகில் அன்னப்ராசனம் முதல் பிண்டபிரதானம் வரையில் சகலத்திலும் மாறுதல்கள் ஏற்பட்டபடியே இருக்கின்றன. தற்காலத்திய விஞ்ஞானகலைகளிலும் மற்றுமுள்ள பலகலைகளிலும் இதுபோல் மாறுதல்களைச் செய்தே ஆகவேண்டிய அவசியம் இருந்தபடியே இருக்கின்றது. அவ்வளவு நிலையற்றதாக இவைகளின் கதி இருந்து வருகிறது. இது அனைவர்க்கும் தெரியும். தற்கால உலகில் ஒருவராகிலும் தாம் கற்ற கல்வியையோ வித்தையையோ, ஒரு முறைப்படிக்கே என்றும் அதிலேயே இன்னும் மேன்மேலும் பயிற்சிபெற்று நிலையாக வாழ்க்கையில் விருத்திக்குவந்து விடலாம், இதுபோல் செய்யமுடியும் என்ற நம்பிக்கையே உலகில் அடியோடு இல்லாமல் போய்விட்டது. சகலரும் 'என் படிப்பு விணாய்ப்போய் விட்டதே, உழைப்பு விருதாவாகி விட்டதே, இப்படியாகும் என்ற விஷயம் எனக்கு முன்னேலேயே தெரியாமல் போய்விட்டதே,' என்று மனமுடைகிறார்கள், திணறுகிறார்கள், பசிக்குப் பனம்பழம் புசித்தவனைப்போல வேதனைகளை வயிற்று வலியைப்போல் வெளியார்க்குத் தெரியாதபடி அனுபவிக்கிறார்கள். இதற்

## வாழ்க்கையும் ஜோதிஷமும்

"அரிது அரிது மானிடராதல் அரிது" என்றபடி ஜகத் சிருஷ்டியில் சகல ஜீவராசிகளிலும் மனுஷ்ய ஜன்மமே சிலாக்கியமானது. இதைச் சகலரும் அறிவர். தர்மம், அதர்மம், ஜீவகாருண்யம் முதலிய குணங்கள் மனிதனிடத்தில் சிறந்து விளங்குகின்றன. மனுஷ்யனால் செய்ய முடியாதது, ஸாதிக்க வியலாதது, உலகில் எதுவுமே கிடையாது. இவ்வாறு உள்ளவைகளுள் ஒருவன் தான் செய்யத் தக்கவை இன்னவை, செய்யத் தகாதவை இன்னவை என்று நன்கறிந்து தன் கடமைகளைச் செய்வானாயின் அவனால் உலகிற்கு எவ்வளவோ நன்மைகள் உண்டாகும்.

ஒருவன் விவேகியாயும் தர்ம சாஸ்திரங்களின் தத்வார்த்தங்களை நன்கறிந்தவனாகவு மிருப்பின், அவனே உலகில் சகலராலும் போற்றுதற் குரியன்.

ஒருவன் தன் வாழ்நாளில் சிறப்புற்றுச் சுகித்திருக்க வேண்டுமானால் தன் பூர்வ புண்யம் எப்படிப் பட்டது, இவ்வுலகில் எவ்வெவ் வகையில் தான் எவ்வளவு வரையில் மேன்மையடைய முடியும் என்பவைகளை முதலில் தன் ஜாதக மூலமாக நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். உலக நிலைமையையும் தன் சரீரஸ்திதியையும் புத்தியின் போக்கும் தீக்ஷண்யமும் மனோபாவமும் எவ்வாறு இருக்கின்றன என்பவைகளைச் சரிவர தெரிந்து நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். இது போல் தெரிந்து கொள்வதால் சமாதானமும் தெளிவும் ஏற்படுகின்றது. இத்துடன் தனது ஆசைகளை ஒரு வரையறைக்கு உட்படுத்திச் செய்வனவற்றைத் திருந்தச் செய்து சுகித்திருக்க முடிகின்றது. இது போன்ற விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஜோதிஷ-

நாம் எப்படி நிறை வேற்றுவது; இதற்கு நாம்
செய்ய வேண்டும்; நம்முடைய மதம், குலம், கோ
ஆசாரம், அநுஷ்டானம் என்ன? நம்முடைய குண
ங்களைப்பற்றி நம்முடைய அளவு கோல் உ
லக்ஷயம் என்ன? தானம், தருமம், பாவம், புண்
எவை? இதனாலாய பயன் யாது? ஆகிய இ
யாவது தெரிந்து நிர்ணயித்துக் கொண்டால்தான்
வரையில் வாழ்க்கையில் சுகப்பட முடியும், க்ஷே
லாம். இத்யாதிகளை நிர்ணயமாகத் தெரிந்து
ஜோதிஷமானது பரம உபயோகமாகவும் பெரு
வும் இருக்கின்றது.

## ஆத்ம சக்தி

சகல விதமான மனிதர்களுக்கும் புத்தி,
உணர்ச்சிகள் என்கிற இம்மூவகை சக்திகள்
மாகவே அமைந்திருக்கின்றன. இவற்றின் வேகப
மானது. அதிலும் பால்ய, யௌவன, வயதில் இ
வேகம் உச்சநிலையை அடைந்திருக்கும். இந்த சக்
போக்கை ஒரு வழிப்படுத்தி சரியான மார்
செலுத்தாவிடில் மனிதன் வாழ்வில் தலைகீழாக
விடுவான்.

புத்தி யுக்தி உணர்ச்சிகளை, தன் பூர்வ புண்
வுக்கு அனுகுணமாக ஒருவன் நல்வழியில் உப
பானால், அவனுக்கு ஸதா ஜயமும் சந்தோ
உண்டாகும். அப்படிப்பட்டவனால் சகல கே
எளிதில் ஸாதிக்க முடியும். புத்தி, யுக்தி, சக்தி
தியாதிகளைப் பொருத்தமாக இணைத்து அவைக
னுக்குப் பேருதவியாயும் பெருந்துணையாயும்
செய்வதே பொதுவாக சகல விதமான கல்விக

யடைவதில்லை ; சுகானுபவத்திற்கு எவ்வளவு சாதனங்கள்
இருப்பினும் மன வெறுப்புடையவர்களாய் உயிருள்ள
பொம்மைகள் போல் உற்சாகக் குறைவுடன் உயிர் வாழ்
கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் தங்கள் மனப் போக்
கின்படி மனக் கோட்டை கட்டுவதிலேயே கருத்துடைய
வர்களாக இருக்கின்றார்கள்.

நாம் கட்டும் மனக் கோட்டைக்கு அஸ்திவார பல
மாக பூர்வ புண்ய தபோபலமும், ஜாதக யோகமும்,
வலிமையான தசைகளின் அனுகூலமும், பகவதனுக்
கிரகமும் வேண்டும். இதைப்பற்றி மேலே குறிப்பிட்ட
இனத்தைச் சேர்ந்தவர்கள் சிந்திப்பதே இல்லை. இதை
அறிந்து செய்தால் தான் இவர்கள் சுகப்படலாம் ;
தங்கள் மனோபீஷ்டங்களைச் சரிவர நிறை வேற்றிக்
கொள்ளலாம். இதை யறியாது கட்டும் மனக் கோட்டை
கள் நீடித்து நிற்கமாட்டா. இவ்விஷயத்தை இவர்கள்
நன்கு உணர வேண்டும்.

மற்றும் சிலர் தம் ஜாதகயோக வலிமையை அறியாது
அவனைப் போலாகி விடலாம், இவனைப் போலாகி விட
லாம் என்று நினைக்கிறார்கள் ; செய்கிறார்கள், ஏமாற்ற
மடைகிறார்கள். இது பெரும் பிசகாகும். ராஜ்யபாரம்
செய்யும் வல்லமை அநேகருக்கு இருக்கலாம். ஆனால்
அந்த பாக்யம் கிடைக்க அதிருஷ்ட முடையவர்கள்
பதினாயிரம் அல்லது லக்ஷத்தில் ஒருவர் தான் உலகில்
அபூர்வமாக இருக்கக் கூடும். இதை அறிந்து தம் பிராப்த
பலனுக் கொப்ப தமது வித்தை, புத்தி, யுக்தி, சக்தி
ஸாமர்த்தியாதிகளைச் சகலரும் உபயோகிக்க வேண்டும்
இப்படிச் செய்தால் தான் நற்பலனை அடைய முடியும்
இது போல் செய்வது தான் சரியான கிரமம் ; இது தா
சாத்தியம். இதை விட்டு விட்டுத் தம் வித்யா வல்லமை

பளம் கிடைக்கிறது பாருங்கள்; இது என்ன கால கதியோ எனக்கு விளங்கவில்லை. தாங்கள் தயவு செய்து என் ஜாதகத்தை சற்று நன்றாகப் பார்த்துச் சொல்லுங்கள்; உங்களுக்கு ரொம்பவும் புண்ணியம் உண்டு'' என்கிறார்கள்.

இவர்கள் ஒரு விஷயத்தைப் பற்றிச் சிந்திக்காதது தான் இதில் மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கின்றது. படிப்பு உழைப்பினால் வந்துவிடக் கூடியது; அநேகமாகப் பாஸ் செய்து விடுவதும் அப்படியே; ஒரே படிப்பில் தேர்ந்து பாஸ் செய்த பலருள் சகலரும் ஒரே மாதிரியான குணம் படைத்தவராக இருப்பதில்லை; இருக்கவும் முடியாது, இது ப்ரத்யக்ஷம். பிறவிக் குணமாக ஒவ்வொருவருக்கும் தனித் தனியாகவே சில குண விசேஷங்கள் அமைந்து விடுகின்றன. உதாரணமாக வாக்வன்மை சமயோசித சாமர்த்தியம், கல்பனா ஞானம், கவித்வத் திறமை, உலகரீதி அறிவு, தாம் கற்ற வித்தையை சந்தர்ப மறிந்து உபயோகிக்கும் நிபுணத்துவம், உறுதியான உள்ளம், சமய மறிந்து பேசுதல், ஊக்கம், உத்ஸாகம், விடா முயற்சி, உடலுழைப்பு, ஸாகஸம், தைரியம், பராக்கிரமம், இவைகளில் ஒருவரைப்போல் மற்றொருவருக்கு அமைவதில்லை. ஆனால் இத்யாதி சக்திகள் சற்று ஏற்றத் தாழ்வாக எல்லோருக்கும் இருக்கத்தானிருக்கின்றன. இம்மாதிரியான சக்திகள் பலனளிக்க வல்லவைகளாக நன் கமைய வேண்டில் இதற்குப் பூர்வ புண்ய பலம் விசேஷமாக இருக்க வேண்டும். இதைத்தான் ஒவ்வொருவரும் அவனவன் செய்த பாக்யம், பூர்வ புண்யம், நாம் கொடுத்து வைத்தது இவ்வளவு தான், 'தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்' என்றபடி யெல்லாம் நடக்கிறது என்கிறார்கள். பூர்வ ஜன்மாவில் விசேஷதபஸ்

தங்களை உபயோகித்தவர் 'சரகர்' என்பவரையும், சஸ்தி ரங்களைப் பிரயோகித்தவர் 'ஸுச்ருதர்' என்பவரையும் பின்பற்றினர்கள்.

மனிதர்களுக்கு ஏற்படும் பிணிகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். (1) சரீரத்தில் பித்தம், வாதம், ச்லேஷ்மம் என்ற மூன்று தன்மையை உடைய பொருள்கள் இருக்கின்றன; ஆகாரக் கோளாறுகளாலும் மற்றுமுள்ள காரணங்களாலும் அவைகளின் ஏற்றத் தாழ்வால் பல வியாதிகள் ஏற்படுகின்றன. (2) ஆவி போன்றுள்ள பூதங்கள், பிசாசங்கள் என்பவைகளால் சிலர் பீடிக்கப்பட்டு அதன் காரணமாக சிலருக்கு சித்தப்ரம்ச வியாதிகள் ஏற்படுவதுண்டு. (3) பில்லி, ஏவல், சூன்யம் உச்சாடனம் முதலிய காரணங்களால் சிலருக்கு மனோவேதனை, ஆவேசம் முதலியவை ஏற்படுபவதாகச் சொல்லப்படுகிறது.

மேற் கூறியவற்றுள் முதற் காரணத்தினல் ஏற்படும் கோளாறுகளை ஔஷதங்களாலும், இரண்டாவது மூன்ருவது காரணங்களால் ஏற்படும் கெடுதிகளை மணிகள் என்றும் இரத்தினங்களாலும், யந்திர மந்திரங்களாலும் நிவர்த்திப்பது வழக்கமாக இருந்து வருகிறது. தற்கால நாகரிகம் வாய்ந்தவர்கள் பேய், பிசாசுகள், ஏவல், சூன்யம் முதலியவைகளை நம்பாமல் ஏளனம் செய்வது வழக்கமாக இருக்கிறது. ஆனல் இவர்கள் இவ்விஷயத்தைக் கேட்டவுடனேயே பரிகாசம் செய்யப்புகாமல் அதிலும் ஏதாவது உண்மை இருக்கலாம் என்று நம்பி ஆராய்ச்சி செய்து தெளிவது நல்லது.

இக்காலத்திலேயும் சில பாட்டுகளாலும், மனோஹரமான குரலுடன் உரக்க உச்சரிக்கப்படும் சில மந்த்ரங்

தற்காலத்தில் கூட, ஒரு வியாதி மருந்து கொடுத்து குணமாகாமற் போனாலும், அல்லது அவ்வியாதி நீடித்து நெடுநாள் இருந்தாலும், அல்லது அதன் காரணம் இன்னதென்று பிடிபடாமற் போனாலும், நம்மவரிற் சிலர் "இது ஏதாவது தெய்வ குற்றமாக இருக்குமோ? குலதெய்வத்திற்கு ஏதாவது பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள். ஜாதகத்தை யாராவது நல்ல ஜோதிஷரிடம் காண்பித்து, ஏதாவது தோஷமிருந்தால் பரிகாரம் செய்து கொள்ளுங்கள்." என்று சொல்வதைப் பார்க்கலாம். சில சிறந்த வைத்தியர்கள் கூட மருந்து கொடுத்துக் களைத்துப் போனால் "இன்னும் அவ்வியாதி குணமாகும் நல்ல காலம் வரவில்லை போலும்" என்று எண்ணுவதுண்டு.

ஆகவே வைத்திய சாஸ்திரத்திற்கும் ஜோதிஷ சாஸ்திரத்திற்கும் ஆதிகாலம் தொடர்ந்தே நெருங்கிய (பிரிக்க முடியாத) உறவு இருந்து வருகிறது; இனி எக்காலத்தும் இருந்துவரும்.

இந்த நவகிரகங்களுடன் கூடிய பிரும்மாண்டத்தை நம் சரீரத்திற்கு ஒப்பிடுவது வழக்கம். சரீரத்தில் உள்ள எலும்பு, நகம், மஜ்ஜை, சர்மம், வஸை, சுக்கிலம் (ரேதஸ்), நரம்பு ஆகிய பாகங்களுக்கு முறையே சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு. சுக்கிரன், சனி ஆகிய இவர்களே அதிதேவதைகள், சூரியனை ஆத்மகாரகனைச் சொல்லுவதும் உண்டு. சூரியன் பித்தத்தையும் ஜ்வரத்தையும் சந்திரன் வாதக்பத்தையும் அங்காரகன் பீஜ ரோகம் புண்புரைகளாலான ரோகத்தையும் புதன் ஆஸனத்தில் வியாதியையும், வயிற்றுவலி சன்னிபாதிக ச்லேஷ்ம தோஷத்தையும், குரு கபத்தையும் பற்றியதாக ஜோதிஷ நூல்கள் கூறுகின்றன.

தேகம், இதனுலான உபாதிகள். இவ்விஷயம் ஜோதிஷ சாஸ்திரத்தில் ரோகாத்யாயத்தில் சகல க்ரந்தங்களிலும் வெகு விமரிசையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இத்தகைய கிரககுரூர வியாதிகளுக்கு வைத்தியம் மாத்திரம் செய்தால் விசேஷ பயனிராது. இதற்கான சாந்தி பரிகாரங்களையும் முறைப்படி செய்யவேண்டும் என்றும் இவ்விரண்டையும் செய்தால் தான் இம்மாதிரியான அந்தர்கதமான கர்மஜ ரோகங்கள் நிவர்த்தியாகும் என்றும் சாந்தி கிரந்தங்களிலும் ஜோதிஷ சாஸ்திரத்திலும் மகரிஷிகளால் கூறப்பட்டிருக்கின்றன. இதை அனுசரித்து நடப்பது உத்தமர்களுக்கு அழகாகும்.

"பூர்வஜன்ம க்ருதம்பாபம், வியாதி ரூபணே பாததே |
தத்சாந்திர் ஔஷதைர் தானைர் ஜபஹோம ஸுரார்ச்சிதைஹி ||"

என்று சொல்லப்படுகின்றது. மேலே குறிப்பிட்ட வியாதிகளுக்கு வைத்தியத்துடன் சாந்தியையும், ஜபம், ஹோமம், தானம், அர்ச்சனை, இத்யாதிகளையும், கிரகப்ரீத்யர்த்தம் செய்யவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இதை யனுசரித்தே ஜோஸ்யத்திற்கும் சிகித்ஸைக்கும் மந்த்ரத்திற்கும் ஒன்றுக்கொன்று பிரிக்கமுடியாத ஸம்பந்தம் உண்டு என்று மேலே குறிப்பிட்டோம்.

சாந்தி பரிகார மந்த்ரயந்த்ர விஷயமாக நம்மால் எழுதப்பட்டுள்ள "வாழ்க்கையில் வெற்றி" என்ற நூலில் முழுவிவரங்களைக் காணலாம்.

மேற்கூறிய விஷயங்களை அனுசரித்து ஒரு வியாதிஸ்தனுடைய ஜாதகத்தைப் பார்த்த மாத்திரத்தில் இந்த அங்கத்தில் இன்ன வியாதியால் இந்த ஜாதகன் பீடிக்கப்படுகிறுன் என்று சொல்லலாம். லக்னுதிபதியைக் கொண்டும், நவாம்சலக்னுதிபதியைக் கொண்டும், ஜாதகன்

னம், விவாகம், நிஷேகம், சீமந்தம் முதலிய எல்லா வைதிக விஷயங்களுக்கும் ஜோதிஷ சாஸ்திரத்தின் உதவி அவசியம் என்பது யாவரும் அறிந்ததே. முற்றுந்துறந்த முனிவர்களும் கால சக்கரத்தில் உழல்பவர்களே யாவர். சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம், இவைகளில் கூறப்பட்டுள்ள புண்ணிய காலங்களை பஞ்சாங்கத்தைக் கொண்டே நாம் அறிகிறோம்.

ஜோதிஷ சாஸ்திரத்தில், ஔஷதிகளைக் கொண்டு வருவதற்குரிய காலமும் வேளையும் கூறப்பட்டுள்ளது. இன்னும் அவைகளைப் பக்குவப்படுத்தி மருந்துகள் தயாரிப்பதற்குரிய யோகங்களும், ரோகத்தின் தன்மை எப்படிப்பட்டது, எவ்வளவு காலத்தில் நிவர்த்தியாகும் என்பதைப்பற்றிய விஷயங்களும் கூறப்பட்டுள்ளன. இன்னின்ன நக்ஷத்திரத்தில் ஆரம்பித்த ஜுரம் இத்தனை நாட்களில் தீரும், அல்லது கெடுதியை விளைவிக்கும் என்று கூட கூறப்பட்டுள்ளது. உதாரணமாக ஒரு ஜுரம் அசுவனி நக்ஷத்திரத்தில் ஆரம்பித்தால் அது 9 நாளில் குணமாகும்; பரணியானால் 5 நாளில் குணமாகும்; ரோகிணியானால் 21 நாட்களில் குணமாகும்; திருவா திரையானால் 5 நாளில் அல்லது 45 நாளில், கெடுதியை விளைவிக்கும்; ஆயில்யமும் மகமும் மரணஸமமான கெடு தியை விளைவிக்கக்கூடும்.

ஒரு வியாதி ஆரம்பிக்கும் போது (1) ஞாயிற்று கிழமையுடன் சதுர்த்தியும், திருவாதிரை ஆயில்யம் மக ஆகிய இவைகளும் கூடினாலும், (2) செவ்வாய்க்கிழமை யுடன் நவமியும் சுவாதி, ஜேஷ்டா பரணி ஆகிய இவை களும் கூடினாலும், (3) சனிக்கிழமையுடன் சதுர்த்தசியு பூர்வ பல்குனி, பூர்வாஷாடம், பூர்வ பாத்ரபதம் (மு பூரம்) ஆகிய இவைகளும் கூடினாலும், ஆயுளுக்

அதற்கு வேண்டிய சரக்குகளை புஷ்ய நக்ஷத்திரத்தில் எடுத்து மருந்து தயாரித்தால் அதியற்புதமான பலன்களைக் காணலாம். இந்த இடத்தில் இந்த சரக்குகளுக்கு வேறு நக்ஷத்திரங்களுக்குப் பிரபாவமில்லை; புஷ்ய நக்ஷத்திரத்திற்கே பிரபாவம் உண்டு.

மற்றும், 'மணி மந்த்ர ஔஷதம்' என்று சேர்த்து சொல்லப்படும் வழக்கப்படி மந்த்ரத்திற்கும் ஔஷதத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. சாதாரண மருந்துகளால் குணமாகாத சில வியாதிகள் மூலிகைகளில் சில மந்திரங்களைப் பிரயோகித்துக் கொடுப்பதால் ஒரே வேளையில் குணமாகிவிடுகின்றன.

அதே மாதிரி, சில திதிகள், சில வாரங்கள், சில நக்ஷத்திரங்களில் சில மருந்துகளை உட்கொண்டால் அவை உடனே பலனைத் தருகின்றன.

சிகித்ஸை ஆரம்பிப்பதற்கு சில நக்ஷத்திரங்கள் சிலாக்கியமானவை; சில கிரகங்களின் பலமும் வேண்டும்; சில வாரங்களில் சில நக்ஷத்திர சம்பந்த மேற்பட்டால் மிகவும் நல்லது என்று சில கிரமங்கள் உண்டு. உதாரணமாக அசுவனி, ரோகிணி, மிருகசீர்ஷம், புனர்பூசம், பூசம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ஹஸ்தம், சித்திரை, சுவாதி, அனுஷம், திருவோணம், அவிட்டம், சதயம், ரேவதி ஆகிய நக்ஷத்திரங்களில் சிகித்ஸை ஆரம்பிக்க வேண்டும். மேற்படி சிகித்ஸை ஆரம்பமாகும் காலத்தில் புதன், குரு, சுக்கிரன் இந்த கிரகங்கள் சுபர்வர்கத்தையாவது, சரராசி அல்லது சரநவாம்சத்தையாவது பெற்றிருப்பது நல்லது. முதலில் மருந்து கொடுக்கும்போது திங்கட்கிழமையில் ஹஸ்தமும், புதன் கிழமையில் அச்வனியும், வியாழக் கிழமையில் சித்திரையும், வெள்ளிக் கிழமையில் புனர்வசுவும் வருமானல் மிகவும் நல்லது.

சஸ்த்ர சிகித்ஸை செவ்வாய்க்கிழமை சனிக்கிழமைகளில் அங்காரகன் வலுத்தும், அஷ்டமத்தில் கிரகமில்லாமலும், உதய நக்ஷத்திரம் திருவாதிரை, கேட்டை, ஆயில்யம், மூலம் ஆகிய இவைகள் சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி ஆகிய திதிகளுடன் சேர்ந்தும் இருக்கும்போது செய்யப்படவேண்டும். மேஷம், விருஷபம், கடகம், கன்னி ஆகிய லக்னங்கள் அநுகூலமானவை.

சில இரசாயனங்கள் நல்ல திதி, வார, நக்ஷத்திர, யோகங்களில், நல்ல லக்னம், நவாம்சங்களில் தயாரிக்கப்படவேண்டும். லக்னத்துக்கு சுபவீக்ஷணியம் வேண்டும்; அப்படியில்லா விட்டால் இரசாயனம் குணமளிக்காது.

பொதுவாக சர்வ ரோகங்களுக்கும் உபயோகமாகும் மருந்துகள் தயார் செய்ய லக்னத்தில் சனி, சூரியன், செவ்வாய் இருப்பது நல்லது. ஞாயிறு, திங்கள், புதன், குரு, சுக்கிரன் இவர்களுடைய வர்கமும் நல்லது. சதுர்த்தி, ஷஷ்டி, அஷ்டமி, நவமி, சதுர்த்தசி ஆகிய திதிகள் நல்லவை. த்விதியையும் துவாதசியும் கூடாது. ஸ்திர கரணமும் நித்யயோகமும் நல்லவை; விஷ்டி ஆகாதது. சரராசி உதயமாகும்போது ஆரம்பித்தல் நல்லது.

வியாதிஸ்தர்களுக்கு வியாதி நீங்கின பிறகு எண்ணெய் தேய்த்து ஸ்நாநம் செய்வதற்கு அசுவனி, பரணி, கிருத்திகை ஆகிய நக்ஷத்திரங்கள் நல்லவை. மிருக சீர்ஷம் முதலியவைகளும் சந்திராஷ்டமும், 3, 5, 7, 10, 12, 14, 16, 22 ஆகிய நக்ஷத்திரங்களும் ஆகாது. செவ்வாய், புதன், குருவாரமும் அவர்களின் வர்கமும் நல்லது. சதுர்த்தி, அஷ்டமி, நவமி, சதுர்த்தசி கூடாது.

வியாதிக்கு சிகித்ஸை செய்வதைவிட வியாதியை தடுப்பது நல்லது என்ற விஷயத்தைக் கவனிக்கும்போது தாம்பத்ய போகத்தை சுபதினங்களில் சுபலக்னங்களி

லிருந்தே இந்த சாஸ்திரத்தின் மகிமை நன்கு விளங்குகிறது. ஆகவே இந்த சாஸ்திரத்தை ஒவ்வொருவரும் சரிவரக் கற்கவேண்டியது அவசியமாகும்.

ஆஸ்திகர்கள் சகலரும் ஜோதிஷ சாஸ்திரப்படி ஒவ்வொரு சுபகாரியங்களையும் செய்கிறார்கள். இந்த சாஸ்திரத்தில் சொல்லியுள்ளபடியே பலன்கள் நடந்து வருவதனால் இதை நம்பவேண்டியதா யிருக்கிறது. இதை அனுஸரிக்காமல் செய்யப்படும் சுபகாரியங்கள் க்ஷேமத்தை தரமாட்டா என்பது நமது முன்னோர்களின் அபிப்பிராயம். அதனால்தான் அவர்கள் இந்த சாஸ்திரத்தை அனுஸரித்தே சகல காரியங்களையும் செய்து வந்தார்கள். இப்பொழுதும் நவநாகரீக வலையில் அகப்படாமல் கிராமாந்தரங்களில் வசித்து வருபவர்கள் இதைச் செவ்வனே போற்றி வருகிறார்கள். நவநாகரீகத்தில் முன்னேற்றமடைந்து ஆங்கிலப் பயிற்சியும் பட்டம் பதவிகளும் பெற்று பழைய தர்மசாஸ்திரங்களைக் கந்தை கூளங்களாகப் பாவிப்பவர்கள் கூடச் சில சமயங்களில் ஜோதிஷத்தை இகழ்ந்தாலும் பல சமயங்களில் இதன் உதவியை நாடியே சகல காரியங்களையும் செய்து வருகிறார்கள்.

இங்ஙனமிருந்தும் ஜோதிஷ சாஸ்திரமானது ஸ்திர பலன்களைச் சொல்லவில்லை யென்றும், சந்தேஹாஸ்பத மான பலன்களையே சொல்லுகிறதென்றும், எனவே தங்க ளுக்கு அதில் அவ்வளவாக நம்பிக்கையில்லை என்றும், ஏதோ பிறருக்காகச் சிற்சில சமயங்களில் இதைக் கையாளவேண்டி யிருக்கிறதென்றும் பலர் சொல்லிக் கொள்கின்றனர். அதற்குக் காரணம் அவர்கள் இ சாஸ்திரத்தைப் பற்றி நன்கு அறிந்துகொள்ளாமையே ஆகும்.

இக்காலத்திலோ நாகரீக முன்னேற்றத்தால் ஜோதிஷருக்கு ஏன் பணம் தரவேண்டும்? நாம் ஏன் அவர்களை மதிக்கவேண்டும்? அவர்களும் நம்மைப் போல் சாதாரண மனிதர்கள் தானே, நாம் ஏன் எதையும் அவர்களைக் கேட்டுச் செய்யவேண்டும்? என்ற இத்தகைய மனோபாவம் நாளுக்கு நாள் பொதுஜனங்களிடம் வலுத்துவிட்டது. எனவே, யார் எதை வேண்டுமானாலும அவரவர் சௌகரியப்படி செய்து கொள்ளலாம் என்ற கொள்கை ஜனங்களிடையே பரவிவிட்டது. இந்த மனோபாவம் அரசாங்கத்தாருக்கும், பொதுஜனங்களுக்கும் உதித்த காலமே இச் சாஸ்திரத்தின் க்ஷீணத்திற்கு ஆரம்பகாலமாகும். அதாவது ஜோதிஷர்களை ஆதரிப்பார் அற்றுப் போகவே அவர்கள் தம் ஜீவனத்திற்கு வழி தேடவேண்டியவர்களாகிவிட்டனர். அதனால் இச் சாஸ்திர ஆராய்ச்சி தினே தினே குறையலாயிற்று.

இக்காலத்திலும் ஜோதிஷர்களுக்கு உதவி புரிய இஷ்டமுடையவர்கள் சிலர் இருக்கின்றனர். ஆனால்; அவர்களுக்கு இச் சாஸ்திர பயிற்சியைக் கொண்டு ஜோதிஷர்கள் அவர்களுடைய பூர்வ புண்ணியங்களையும், குணவிசேஷங்களையும், அவர்களின் பாக்கியத்திற்கு அனுகுணமாகச் செய்யத்தக்கவை இவை, செய்யத்தகாதவை இவை, என்பதையும் எடுத்துச் சொன்னால் இவற்றை அவர்கள் விரும்புவதில்லை. அவர்கள் தங்கள் மனோபாவத்திற்குத் தகுந்தபடி தம் கர்மா மாறவேண்டும் என்று கிணைப்பவர்களாக இருக்கிறார்கள்.

ஜோதிஷ சாஸ்திரம் எதற்காக ஏற்பட்டது? அதன் உபயோகம் என்ன? என்பவை அவர்களுக்குத் தெரிவதில்லை. உத்தம ஜோதிஷர்கள் அவைகளைப் பற்றி ஏதேனும் சொல்ல ஆரம்பித்தாலும் உடனே அவர்கள் வாயை

செலுத்துவது தகாது'' என்று சொல்லுகிறான். அதைக் கேட்டவுடன் அவர்கள் "இந்த ஜோதிஷர்களெல்லாம் பழைய பிச்சுக்கள்; ஓலைச்சுவடியை வைத்துக்கொண்டு ஏதோ பிதற்றுகின்றனர். நம் தேசத்து ஜோதிஷ கிரந்தங்களே உபயோகமில்லை.'' என்று ஜோதிஷர்களையும் நமது ஜோதிஷ கிரந்தங்களையும் வெறுத்துவிடுகின்றனர். மேலும் அவர்கள் 'லண்டனில் உட்டு, அப்பு மேன், அவுடினி முதலியவர்கள் பௌதிக சாஸ்திர நிபுணர்கள். இவர்கள் போட்ட புத்தகம் 'ஹிக்கின்பாதம்' புத்தகசாலையில் 15 ரூபாய்க்கு விற்கிறது. அதில் ஒன்று வாங்கிவிட்டால் மிகவும் சரியாகப் பலன்களை அறிந்துவிடலாம்' என்கிறார்கள்.

இங்கிலீஷிலுள்ள ஜோதிஷ புஸ்தகங்கள் தோட்டங்களிலுள்ள 'குரோட்டன்' செடிகளைப் போல கண் பார்வைக்கு மட்டும் அழகாக இருக்கின்றனவே தவிர அவற்றால் பயன் ஒரு சிறிதும் இல்லை. நமது தேசக் கிரந்தங்களோ வென்றால் பார்வைக்கு அழகா யிராவிடினும் மிகவும் பயன் தருவனவாக பல விருக்ஷங்களைப் போல் இருக்கின்றன. இதுதான் மேனாட்டு ஜோதிஷ நூல்களுக்கும் நம் நாட்டு நூல்களுக்கும் உள்ள வித்தியாசம்.

மற்றும் மேற்கூறியவர்களுள் ஒரு சாரார் "ஆங்கில ஜோதிஷத்தில் தேர்ந்தவர்கள் பலர் இருக்கின்றனர். அவர்களைக் கேட்டால் எதையும் சரியாகச் சொல்வார்கள். 'டர்பி லாட்டரியில் முதற்பரிசு வரவேண்டியதற்குக் கணக்குப் போட அவர்களுக்குத்தான் தெரியும். பத்து ரூபாய் செலவானாலும் அவரிடமே கேட்கலாம்.'' என்று போய்விடுகின்றனர்.

ஆங்கில ஜோதிஷ புஸ்தகம் பார்வைக்கு வெகு அழகாக இருப்பதும் கணக்குகள் விமரிசையாகப் போடப்ப

இவ்வாறு சிலர் தோன்றிவிடுவதால் உண்மையான ஜோதிஷனை நாடிக் கேட்கக்கூடப் பலர் யோசிக்கின்றனர். ஜோதிஷன் எவ்வளவு சத்தியவாதியாக இருந்தாலும் அவனை நம்பவும் மறுக்கின்றனர்.

இஃது இவ்வாறாக இக்காலத்திய ஜோதிஷ சீர்திருத்தக்காரர் என்பவர்களோ ஜோதிஷத்தின் சீரைக் கெடுக்கின்னரேயன்றி சீர்திருத்தம் செய்வதில்லை. ஜோதிஷ சாஸ்திர மொழி பெயர்ப்புகளிலும் அவர்கள் மொழியைப் பெயர்த்து விடுவதன்றி வேறொன்றும் செய்வதில்லை.

நமது நாட்டினின்றும் வெளி நாடுகளுக்குக் கொண்டு போகப்பட்ட ஜோதிஷ நூல்களில் உள்ளவற்றைக் கொண்டே சகல தேசங்களிலும் ஜோதிஷத்தைச் சிறப்புறச் செய்து ஆராய்ச்சி செய்து வந்திருக்கின்றனர் என்று முன்னமே பார்த்தோம். அத்தகைய ஜோதிஷத்திற்கே பிறப்பிடமான நமது நாட்டில் இச் சாஸ்திரத்தை சிறப்புற்றோங்கும்படி செய்யவேண்டியது நம் நாட்டவர் கடமையாகும்.

## நமது வலிமை

காடுகளில் மரை என்ற ஒரு ஜாதிமான் வசிக்கின்றது. அதன் வாலின் பக்கமிருந்து பரிமளமான வாசனை உண்டாகின்றது. ஒரு நாள் ஒரு மான் தென்றல் காற்று வீசும்போது வடதிசையை நோக்கி நின்றுகொண்டிருந்தது. அப்போது அந்த வாசனை தென்றலோடு கலந்து வர அதனை முகர்ந்த அந்த மான் அது தெற்கிலிருந்து வருவதாய் நினைத்து தெற்கு நோக்கி ஓடிற்று. வெகு வேகமாக வெகுதூரம் ஓடி ஓரிடத்தில் வேறொரு பக்கமாய்த் திரும்பி நின்றபோது அப்பக்கத்திற்கு எதிர்ப்பக்கத்திலிருந்து வாசனை வருவதாகத் தோன்றவே, பின்

லும் காலமழை, தானியாபிவிருத்தி, பசு பக்ஷிகள் க்ஷேமாபிவிருத்தி, முதலிய நன்மைகளும், மழையின்மை, அதிக மழை, பயிர்ச்சேதம், பசுபக்ஷி இத்யாதிகளின் பீடை, ரோகம், சத்ருவிருத்தி, அக்னி பயம், பெரியோர்களின் உலகவாழ்வு முடிதல் இவைபோன்ற தீமைகளும், பூகம்பம் முதலிய உற்பாதங்களும் கூட கிரகங்களாலேயே ஏற்படுகின்றன என்பதை ஒருவரும் மறுக்கமுடியாது. அரசனுவதும் ஆண்டியாவதும் கிரஹ பலமே. இப்படி எல்லாம் கிரஹ பலத்தால் ஆவதனுல் ஒவ்வொருவரும் தத்தம் விதியின் பயனை ஒருவாறு அறிந்து கஷ்டங்களை நிவர்த்தி செய்துகொண்டு சுகப்படுவதற்கு ஜோதிஷ சாஸ்திரம் மிகவும் உபயோகமாக இருக்கிறது.

சிலர் ஜோதிஷ சாஸ்திரத்தின் உபயோகத்தைச் சரிவர அறியாமல் விபரீதமான எண்ணங்களாலும் தன் முயற்சி யின்மையாலும் பலவாறு கஷ்டங்களை அடைகிருர்கள். வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு "தலை விதியை நம்மால் மாற்ற முடியுமா? ஏதோ நடப்பது நடந்தேதீரும்." என்கிருர்கள். இது மிகவும் வருந்தத் தக்கதாக இருக்கிறது.

அப்படியின்றி நன்கு முயலும் ஒருவன் எதையும் அடையலாமென்பதும், தர்ம நியாயப்படி தன் கடமைகளைச் செய்து வந்தால் தலை எழுத்து எவ்வளவு கெடுதலாக இருந்தாலும் ஸ்வல்ப பலனுவது அடையலாம் என்பதும் எனது நம்பிக்கை. எனக்குத் தெரிந்த வரையில் பெரியோர்களது அபிப்பிராயமும் இதுவேயாகும்.

ஒருவனுக்கு எவ்வளவு கஷ்டங்கள் நேருமாயினும் அவைகளிடையே மனத்திற்கு ஆறுதல் அளிக்கத் தக்கதாக ஒவ்வொரு சந்தர்ப்பம் இருந்துகொண்டே இருக்கும் என்பதையும், மனிதரது வாழ்நாட் கணக்கில் நன்மை

மிகவும் மெச்சத்தக்கதே. பெற்ளேர்கள் குமாரனுடைய நோக்கத்திற்கு உட்படுவதும் சிறந்ததே. ஆனுல் அந்தச் சமயத்தில் சற்று யோசித்து மஹரிஷிகளாலும் மஹான்களாலும் நன்கு பரிசீலனை செய்து கடைந்தெடுக்கப்பட்ட தேவாம்ருதம் போன்ற ஜோதிஷ சாஸ்திர மூலமாகப் பலனை அறிந்து அவன் கர்மாவிற் கனுகுணமான மார்கத்தில் புகவும் தன் பிராப்தத்தை அறிந்து உழைக்கவும் அவனைத்தூண்டி விடுவார்களேயானுல் அதைவிட அவனுக்குச் செய்யக்கூடிய உபகாரம் வேறு கிடையாது.

இந்தச் சமயத்தில் ஜாதகபலனைச் சொல்லும் ஜோதிஷர்களும் தங்களுக்கு எவ்வளவு பொறுப்பு இருக்கிறது என்பதை நன்கு யோசிக்கவேண்டும். மாதா பிதா, குரு, தெய்வம் என்ற வரிசையில், ஜோதிஷன் பலனைச் சொல்லும்போது குருவாக விளங்குகிருன். அந்தச் சமயத்தில் தெய்வானுக் கிரஹத்தை முன்னிட்டு ஸத்யமான சதுர புத்தியுடன் சாஸ்திர சம்மதமாய் அவன் பூர்வ ஜன்ம பலன்களையும் இந்த ஜன்மாவில் நடக்கவேண்டிய சுபாசுப பலன்களையும், எடுத்துச்சொல்ல வேண்டியது மிகவும் அவசியம். இப்படிப்பட்ட சமயங்களில் ஜோதிஷனைப் பரிகசிப்போரும் பலர் இருக்கலாம். ஜோதிஷன் அவர்களுடைய மனப்போக்கின்படி பலன் சொல்ல வியலாதபோது அவமானப் படவும் நேரிடலாம். சில காலம் சகிப்புத் தன்மையுடன் ஜோதிஷன் பொறுத்து வருவானுல் ப்ராப்தானு ஸாரமாய்ப் பலன்கள் ஜோதிஷன் சொன்னபடி நடக்கும்போது அவர்கள் தம் பிழையை ஒப்புக்கொள்வார்கள். ஜோதிஷனையும் தெய்வஞன் என்று கொண்டாடுவார்கள். உத்தம ஜோதிஷன் சிலர் முகஸ்துதி செய்வதையும் சிலர் நிந்திப்பதையும் பொருட்படுத்தாது தன்னம்பிக்கையுடன் தனது கடமைகளைச்



சரிவரச் செய்து வரவேண்டும். எவ்வளவு கஷ்டங்கள் நேரிட்டாலும் ஸத்யம் தவருமல் பலன்களைச் சொல்லி வரவேண்டும். இப்படி யெல்லாம் அநேகம் ஜோதிஷர்கள் இக்காலத்தில் செய்வது கிடையாது. அதனுல்தான் ஜோதிஷ சாஸ்திர நம்பிக்கை ஜனங்களுக்குள் குறைந்து போய் விட்டது. அநேகம் ஜோதிஷர்கள் குறுக்கு வழியாக ஜீவனேபாயத்துக்காக கேட்போர் மனம்போலவே பேசி விடுகிருர்கள். அவர்களுக்குப் பிரக்யாதியும் பணமும் வெகு சீக்கிரம் கிடைத்து அழிந்துவிடுகிறது.

## உத்தம ஜோதிஷர்களின் கடமை

ஜோதிஷர்கள் இக்கலையை அழியாமல் காப்பாற்றி நல்ல ஞானத்தைப் பெறவேண்டும். தாங்கள் கற்ற கல்வியின் உதவியால் இதரர்களுக்கு நன்மை பயக்கத்தக்க காரியங்களைச் செய்து வரவேண்டும். சமூக வாழ்க்கைக்கு இன்றி யமையாத அரசியல், யுத்தம், வாணிபம், விவசாயம் முதலிய தொழில்களைச் செய்ய அனுகூலமான காலத்தைக் குறிப்பிடவும், அவர்களின் பிராப்தத்திற்குத் தகுந்தபடி அவ்வவ் வேலைகளைச் செய்யும்படி உபதேசிக்கவும் வேண்டும். அதனுல் பலரும் அதை அறிந்து நடப்பார்கள். என்னென்றைக்கும் க்ஷேமத்தையே அடைவார்கள். அப்போது தான் ஜோதிஷமும் நாமும் நமது தேசமும் முன்னேற்ற மடையமுடியும்.

ஜோதிஷர்கள் சாஸ்திரங்களிலுள்ள விஷயங்களை நன்கறிந்து அனுபவத்தில் கொண்டு வந்து சமயோசித புத்தியுடன் பிறருக்குப் பயன்படச் செய்பவராயும், தெய்வபக்தியும், மனேதைரியமும் ஆசார அனுஷ்டானங்களும் உடையவர்களாயும் தரும சீலர்களாயும் இருக்க வேண்டும். அப்படி யிருந்தால்தான் அவர்கள் நற்புகழ்

பெற முடியும். நமது முன்னோர்களின் ஆசாரங்களும்
பழக்க வழக்கங்களும் இவ்வாறே இருந்தன. அப்பழக்க
வழக்கங்களைப் பின்பற்றுவதே எக்காலத்திலும் நமக்கு
ஏற்றதும் யாவருக்கும் நன்மையை விளைவிப்பதுமாகும்.

ஒருவன் பூர்வத்தில் தான் செய்த சத்கர்மம் துஷ்கர்
மங்களுக்கு அனுகுணமாக இவ்வுலகில் ஜனிக்கிறான் என்
பது நமது சாஸ்திர சித்தாந்தம். ஒருவன் பல்லக்கேறுவ
தையும் மற்றொருவன் பல்லக்கைச்சுமப்பதையும் நாம் ப்ரத்
யக்ஷத்தில் பார்க்கிறோம். விசேஷதபஸ் செய்து தெய்வானு
கூலத்தைப் பெற்ற புண்ணியவான்களே பல்லக்கேறுபவர்
களாக ஜனிக்கிறார்கள். அதுபோலவே பாபம் செய்
வர்கள் பல்லக்கு சுமக்கிறவர்களாகப் பிறக்கிறார்கள்
பல்லக்குச் சுமக்கும்போதும் ஒருவன் தன்னைத்தான் அற
யாது பாப கருமங்களையே மென்மேலும் செய்து வருவ
னானால் அவன் எத்தனை ஜன்மம் எடுத்தபோதிலும் பல்ல
குச் சுமக்கத்தான் வேண்டும்.

பல்லக் கேறுபவர்கள் சதா புண்ணிய கார்யங்
களையே செய்து வருவார்களானால் அவர்கள் எத்தனை
ஜன்மம் எடுக்க நேரிடினும் பல்லக்கு ஏறுபவர்களாகவே
ஜனிக்கிறார்கள். கடவுளின் அனுக்கிரஹத்தினாலும் பூர்
புண்ய பலத்தினாலுமே இந்த ஜன்மாவில் நாம் நல்ல நி
மையிலிருக்கிறோம் என்பதை அநேகர் அறிவதில்
தேகமே ஆத்மா, போகமே மோக்ஷம் என்று கருதிப்
தப்பான காரியங்களைச் செய்கிறார்கள். அவர்களுக்கு
தச் சமயத்திலும் பூர்வத்தில் செய்துள்ள புண்யபலம் ஜ
தையே அளிக்கிறது. அதனால் சிலர் இந்தக் காலத்தில் பு
யமாவது, பாவமாவது, யார் துஷ்கருமங்களைச் செய்கி
களோ அவர்களுக்குத் தான் ஜயம் கிடைக்கிறதென்
எண்ணுகிறார்கள். இது எவ்வளவு அறியாமை என்

கால் அப்படி அவர்கள் எண்ணி ஏதேனும் சொன்ன போதிலும் பணம் கொடுக்கும் பிரபு "அதெல்லாம் வேண்டாமையா! நன்றாய் ஜாதகத்தைப் பார்த்து ராஜ யோகங்களில் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள். இந்த வீண் வேதாந்தமெல்லாம் வேண்டாம்" என்று வாயை அடைத்து விடுகிறார். எள்ளுக்குள் எண்ணெய் ஈசனால் படைக்கப் பட்டிருப்பினும் நம் முயற்சியின்றி எள்ளின் பயனாகிய எண்ணெயை அடைய முடியாதது போல நம்பிக்கையும் நன்முயற்சியுமின்றி அருமையான ஜோதிஷ சாஸ்திரத்தின் மூலம் பலனை யாரும் அடையமுடியாது. ஜோதிஷ சாஸ்திரத்தையும் உலக ரீதியையும் நன்கறிந்தவனே உத்தம ஜோதிஷன். அவன் கூடியவரையில் தன் ஜீவனத்தை ஏதேனும் ஒரு நியாயமான வழியில் நடத்திக்கொண்டு, தான் கடைத்தேறும் வழியைப் பார்க்கிறான். தன்னைத்தேடி வருபவர்களுக்கு நன்கு உபதேசிக்கிறான். விதியின் வழியே மதிசெல்லும் என்றபடி சில பாக்கியசாலிகளே அப்படிப்பட்ட ஜோதிஷனை நாடி, பக்தி பூர்வகமாய்க் கேட்டு நற்பலனை அடைகிறார்கள்.

சிலர் தரித்திரத்தின் கொடுமையால் வயிற்றுப் பிழைப்பை நடத்தவேண்டி ஜோதிஷராக வெளிக் கிளம்பி விடுகிறார்கள். அவர்கள் என்ன செய்கிறார்கள்? பாமர ஜனங்கள் "எனக்கு அதிர்ஷ்டம் வருமா, பணம் வருமா, லாட்டரி வருமா" என்றால். "கட்டாயம் கிடைக்கும். உன் ஜாதகத்தைக் கணிதம் செய்கிறேன். அஷ்டகவர்கம் தசவர்கம் எல்லாம் போடுகிறேன். மந்திர உச்சாடனம் செய்கிறேன். கொஞ்சம் பணம் செலவாகும்" என்கிறார்கள். ஜோதிஷம் இன்னதென்பதே அறியாதவனுக்கு பணம் லாட்டரியில் வர அஷ்டவர்கம் தசவர்கம் எல்லாம் போடுபவரான ஜோதிஷர் கிடைத்தபோது சும்மா இருப்

கால் அப்படி அவர்கள் எண்ணி ஏதேனும் சொன்ன போதிலும் பணம் கொடுக்கும் பிரபு "அதெல்லாம் வேண்டாமையா! நன்றாய் ஜாதகத்தைப் பார்த்து ராஜ யோகங்களில் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள். இந்த வீண் வேதாந்தமெல்லாம் வேண்டாம்" என்று வாயை அடைத்து விடுகிறார். எள்ளுக்குள் எண்ணெய் ஈசனால் படைக்கப் பட்டிருப்பினும் நம் முயற்சியின்றி எள்ளின் பயனாகிய எண்ணெயை அடைய முடியாதது போல நம்பிக்கையும் நன்முயற்சியுமின்றி அருமையான ஜோதிஷ சாஸ்திரத்தின் மூலம் பலனை யாரும் அடையமுடியாது. ஜோதிஷ சாஸ்திரத்தையும் உலக ரீதியையும் நன்கறிந்தவனே உத்தம ஜோதிஷன். அவன் கூடியவரையில் தன் ஜீவனத்தை ஏதேனும் ஒரு நியாயமான வழியில் நடத்திக்கொண்டு, தான் கடைத்தேறும் வழியைப் பார்க்கிறான். தன்னைத்தேடி வருபவர்களுக்கு நன்கு உபதேசிக்கிறான். விதியின் வழியே மதிசெல்லும் என்றபடி சில பாக்கியசாலிகளே அப்படிப்பட்ட ஜோதிஷனை நாடி, பக்தி பூர்வகமாய்க் கேட்டு நற்பலனை அடைகிறார்கள்.

சிலர் தரித்திரத்தின் கொடுமையால் வயிற்றுப் பிழப்பை நடத்தவேண்டி ஜோதிஷராக வெளிக் கிளம்பி விடுகிறார்கள். அவர்கள் என்ன செய்கிறார்கள்? பாமர ஜனங்கள் "எனக்கு அதிர்ஷ்டம் வருமா, பணம் வருமா, லாட்டரி வருமா" என்றால். "கட்டாயம் கிடைக்கும். உன் ஜாதகத்தைக் கணிதம் செய்கிறேன். அஷ்டகவர்கம் தசவர்கம் எல்லாம் போடுகிறேன். மந்திர உச்சாடனம் செய்கிறேன். கொஞ்சம் பணம் செலவாகும்" என்கிறார்கள். ஜோதிஷம் இன்னதென்பதே அறியாதவனுக்கு பணம் லாட்டரியில் வர அஷ்டவர்கம் தசவர்கம் எல்லாம் போடுபவரான ஜோதிஷர் கிடைத்தபோது சும்மா இருப்

ளின் அபிப்பிராயம் பிரத்யேகமாக இருக்க வேண்டும். கஷ்டமான எந்தவிஷயமும் கூடியவரையில் தனக்குள்ளிருப்பதுதான் பரமரகஸியம். ஒருவர் அறியச் சொல்வது ரகஸ்யம், அதிகப்பட்டால் அம்பலம். 'தோழனோடும் ஏழமைபேசேல்' என்பதுபோல் தன் கஷ்டங்களைப் பலருடன் சொல்லிக்கொள்வதனால் தொழிலுக்கு ஆபத்து ஏற்படுமேயொழிய அனுகூலமுண்டாகாது.

நமது தேசத்தில் தொழிலில் ஒருவருக்கொருவர் ஒற்றுமையாக இருப்பதில்லை. எந்தத் தொழுக்கும் ஒற்றுமை அவசியம். ஜோதிஷர்கள் பரஸ்பரம் ஒற்றுமையாக இருக்கப் பாடுபடவேண்டும். ஒரு ஜோதிஷர் 'உனக்கென்ன தெரியும்; நான் மஹா கெட்டிக்காரன்' என்றால் மற்றொரு ஜோதிஷர் "எனக்குத் தெரியாதவை எவ்வளவோ இருக்கின்றன, தாங்கள் தெரிந்தவற்றை எனக்கு உபதேசியுங்கள்" என்று கேட்பது உத்தமம். இதனால் அகாரணமான விரோதபுத்திக்கு இடமிராது, தினே தினே ஒற்றுமையும் ஏற்படும். ஜோதிஷர்கள் ஒற்றுமைப்பட்டிருந்தால் "கூடிக்கெட்டவரில்லை" என்பதுபோல அவர்களால் தேசத்திற்கு எவ்வளவோ நன்மைகளுண்டாகும். ஜோதிஷத் தொழிலை ஆரம்பிக்குமுன் இருக்கும் கஷ்டத்தைவிட தொழிலை ஆரம்பித்த பிறகு கஷ்டம் அதிகமாக இருக்கும். தொழிலில் தான் நினைத்தபடி வேலைகள் நடக்காமலிருக்கும்போது மனம் தடுமாற்றமடையும். அந்தச் சமயத்தில் தங்கு தடையற்ற சாமர்த்தியத்தினாலும் நன் முயற்சியினாலும் சத்தியம் தவறாமல் தன் வேலைகளைத்திறன்படச் செய்து முடிக்கவேண்டும். சிலர் தொழிலில் சித்தி பெறாமலிருப்பதற்கு ஒரு கிரமமான வழியை அனுஷ்டிக்காமலிருப்பதே காரணமாகும். தனக்குக் கஷ்டம் நேரிட்டபோதிலும் தொழிலில் சூதான மார்

அமைதியினுலும் உண்டாகின்றது. நல்ல அனுபவமுடைய ஜோதிஷன் அனுவசியமாய்ப் பிறரிடம் பேசவும்மாட்டான், யோசனையையும் கேட்கமாட்டான்.

ஜோதிஷர்கள் சாஸ்திராதார விஷயங்களை நன்கறிந்தவர்களாகவும், சகலருக்கும் உபயோகமான சமஸ்த விஷயங்களுக்கும் வழிகாட்டியாகவும், தத்துவ சாஸ்திரங்களில் பாண்டித்தியமுடையவராயும், பூர்வ பாக்கியங்களை அறிந்து சொல்லுபவராயும், உலக நன்மையை நாடுபவராயும், சகலருடனும் சிநேகமாகப் பழகுபவராயும், ஸ்வதர்மாசார அனுஷ்டானங்களில் தவருதவராகவும், ஜாதகர்களின் மனதை விசாலப்படுத்துபவராகவும், நற்காரியங்களைச் செய்ய உபதேசிப்பவராகவு மிருக்கவேண்டும்.

இவ்வுலகில் ஜனித்துள்ள ஒவ்வொரு மனுஷ்யனுக்கும் 'ஸர்வேந்திரியாணும் நயனம் (கண்) பிரதானம்' என்பதுபோல் ஜோதிஷம் கண்ணைப்போல் உபயோகமானது. ஜாதகபலனை நிர்ணயித்துச் சொல்லும் ஜோதிஷர் கடவுளுக்குச் சமானமாவர்.

மூற்காலத்திலிருந்த ஜோதிஷர்கள் பகவதனுக்கிரஹமுடையவர்களாய் தேவதாம்சம் பொருந்தியவர்களாகவிருந்தார்கள். இக்காலத்தில் கூட அபூர்வமாகச் சிலர் தேவாம்சம் போன்றவர்களாக இருக்கிருர்கள் என்பது எனது நம்பிக்கை.

ஜோதிஷர் தோட்டி முதல் தொண்டைமான் வரையில் சகலரின் குணுதிசய விஷயங்களையும் நன்கறிந்தவராக இருக்கவேண்டும். உலக அனுபவம் உள்ளவராயும் நீதி சாஸ்த்ரமறிந்தவராயும் ஆத்மானுபவமுடைவராயும் சதுரராயும் இருக்கவேண்டும்.

ஜோதிஷத்தைக்கற்றதன் பயனுக ஜோதிஷர்கள் நல்லொழுக்க முள்ளவர்களாக இருக்க வேண்டும்.

இருக்கின்றது. இவர்கள் தங்கள் திறமையை வேறு ஏதேனும் நல்லவழியில் பயன்படுத்தினால் உலகத்துக்கு எவ்வளவோ உபகாரமாய் இருக்கும். இப்படிச் சிலர் செய்துவிடுவதால் உத்தம ஜோதிஷனின் உழைப்பும் விருதாவாகி விடுகிறது.

தற்கால நிலைமையில் விவேகிகளான ஜோதிஷர்கள் செய்யவேண்டியவை:

"அநித்யாநி சரீராணி விபவோ நைவ சாசுவத:" என்பதை யறியாமல் நம்மில் பலர் சரீரசுகமும், அநித்ய ஆநந்தவிஷய போகங்களுமே முக்கியமென நினைக்கிறார்கள் நாகரீக முறைகளாலும் விதேசியப் பழக்கங்களாலும், இப்படியாகி விட்டது நமது பெரியோர்கள் இகபர ஸாதகமான நன்மைகளையடைய ஜோதிஷ சாஸ்திரத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்பதை அநேகர் உணர்வதில்லை. காலதேச வர்த்தமானங்களை அனுசரித்து அவரவர்களின் விதிமுறைப்படி செய்யவேண்டிய கடமைகளைச் சொன்னாலும் அலக்ஷியமாக நினைத்து விடுகிறார்கள். சாசுவதமான ஸ்ரேயஸ்ஸுக்குத் ஸாதனமான விஷயங்களை ஜோதிஷர்கள் அவர்களுக்கு நன்றாக உபதேசிக்கவேண்டும். சகலரையும் ஆசார அனுஷ்டானங்களுடனிருந்து வாழ்நாட்களை வீணாட்களாக்காமல் ஈடேறச் செய்யவேண்டும். ஜோதிஷ சாஸ்திரத்தை மற்ற சாஸ்திரங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இது எவ்வளவோ மேம்பட்டது என்பது விளங்கும். விவேகியான ஜோதிஷன் காலை எழுந்தது முதல் இரவில் உறங்கும் வரையில் ஒரு க்ஷணப்பொழுதையும் வீணாக்கக் கூடாது. அக்ஞானத்தினாலாவது லோபத்தினாலாவது தனக்குரித்தான ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்காமல் விடலாகாது. அதனால் கஷ்டம் நேரிட்டாலும் அது நன்மையைப் பயக்கும். எந்தக்காரணத்தினாலும் தமது ஸ்வதர்மா

பலத்தை தெரிந்து நடந்து கொள்ளும்படிக்கும் ஜோதிஷ சாஸ்திரத்தில் ருசியுண்டாகும்படியும் செய்து வரவேண்டும். அப்போது தான் ஜோதிஷர்களும் சுகப்பட முடியும். ஜோதிஷ சாஸ்திரமும் மேன்மையடையும்.

ஜோதிஷத் தொழிலை மேற்கொண்டால் தரித்திரம் வந்துவிடும் என்று சிலர் கூறுகிறார்கள். அது முற்றிலும் தவறு. சாஸ்திரத்தையும் பலபாகம் சொல்லும் முறைகளையும் சரிவரக்கற்காமல் அரை குறையாகப் படித்து பொறுப்பில்லாமல் தம் மனம்போனபடி ஜாதகபலன் சொல்பவர்கள் நவகிரக தேவதைகளின் சாபத்திற்காளாகி ஒரு வேளை க்ஷீணமடையக்கூடுமேயன்றி முறையாகக் கற்றுப்பலன் சொல்லும் ஜோதிஷர்களுக்குக் குறைவு ஒரு நாளும் நேராது. உத்தம ஜோதிஷன் 'ஸதா ஸந்துஷ்டசித்தானும் ஸம்பதஸ்துபதேபதே' என்கிறபடி ஸதா ஸந்தோஷ சித்தமுடையனாக இருப்பான். தேஜஸ்வியாயும் லக்ஷ்மிகடாக்ஷத்துடன் கூடியவனாயும் மகா பாக்கியசாலியாகவும் வாழ்வான் என்பது பெரியோர்களின் அபிப்பிராயம். சாஸ்திரங்களும் அவ்வாறே கூறுகின்றன. அனுபவத்திலும் அப்படியே தான் இருக்கிறது.

இக்காலத்தில் கற்றுக்குட்டி ஜோதிஷர்கள் சிலர் ஒழிந்த வேளையில் கிடைத்தது போதுமென்று, தம் ஜீவனோபாயத்திற்கு வேறு உத்தியோகமிருந்தும், தமக்கு ஜோதிஷ விஷயம் நன்றாகத் தெரியாமலிருந்தும், பலரின் தயவை விரைவில் சம்பாதித்துக்கொள்வதன் பொருட்டுப் பெரிய ஜோதிஷர்கள் போல நடிக்கிறார்கள். 'அல்பவித்யை அனர்த்தஹேது' என்கிறபடி இவர்கள் வேடிக்கையாகப் பலன் சொல்வது சிலவேளையில் விபரீதமாக முடிந்து விடுகின்றது. இப்படிப் பட்டவர்களுக்கு ஒருக்-

அவர்களுக்குப் பணம் கொடுப்பது புண்ணியமுமாகும். நல்ல பாண்டித்திய முடையவருக்குத்தான் பணம் வாங்க தைரியமுமிருக்கும் என்பதை சகலரும் அறியவேண்டும். கல்வியுடையவர்கள்தாம் கற்றறிந்தபடி பரோபதேசே பாண்டித்யம் என்றிராமல் நல்வழியிலே ஒழுகுதல்வேண்டும், 'கற்கக் கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக' என்றபடி தாம் கற்றபடி அனுஷ்டானத்தி லிருப்பவரே உண்மையான கல்வி யறிவுடையவராவார்.

சரீர சம்பந்தமான சம்சார சாம்ராஜ்யத்தில் நற்பலனடைதற்கும், ஞானனந்த மயமான ஆத்மசுகத்திற்கும், நன்மார்க்கத்தை போதிப்பது ஜோதிஷ சாஸ்திரமேயாகும். ஆகையால், ஜாதகபலனைச் சொல்லும்போது இவைகளை மனதில்கொண்டு பலன் சொல்லவேண்டும். எனெனில் அதனுல் ஆகவேண்டியகாரியம் சிறந்ததாக இருப்பதால் பலன்களைத் தீர யோசித்தே சொல்லவேண்டும்.

ஜோதிஷர்கள் கூடிய வரையில் தெய்வ பக்தியுடனிருக்கும் ஆஸ்திகர்களான உத்தமர்களுக்கே பலன் சொல்லவேண்டும். அறிவீனரும் அகந்தை யுடையவரும் வீண்வாதம் செப்பவருமான விதண்டாவாதிகளுக்குப் பலன் சொல்ல லாகாது. அப்படி சொல்ல நேரிடுமானுல் அப்போது அவர்களுடைய குற்றங்களும் குறைகளும் தம்மிடம் அணுகாதபடி தம்முடைய பேச்சையும் நடத்தையையும் வெகு ஜாக்கிரதையாகக் காத்துக் கொள்ளவேண்டும். தர்ம விரோதமான காரியங்களுக்கு ஒரு பொழுதும் ஜோதிஷத்தைக் கொண்டு பலன் சொல்லலாகாது.

யாராவது ஒரு புது மனிதன் நம்முடன் வெகு பக்ஷமாக நடித்து நம் தொழிலில் குயுக்தியான முறைகளைக்

மல் பார்த்துக்கொள்ள வேண்டும். ஹிதமான நல்ல வசனங்களையே பேசவேண்டும்; ஒருவன் கோபம் மிஞ்சின வனுகி கெட்ட வசனமாக ஏதேனும் நம்மைப் பேசிவிடினும் நாம் அடங்கி 'மௌனம் ஸர்வார்த்த ஸாதகம்' என்றபடி வாய் திறவாமல், அல்லது அடக்கமாக இரண்டொரு வார்த்தைகளைச் சொல்லி, நின்று விட்டாலும் அதுவே அவனுக்கு ஏற்ற தண்டனையாகும்.

ஒருவர் ஜாதகத்தை வைத்துக்கொண்டு மானக் கேடான பேச்சுக்களை நாம் ஒருபோதும் பேசக்கூடாது. சாஸ்திர ஆதாரங்களையும் பெரியோருடைய கொள்கைகளையும் ஏளனமாக உரைத்தல் கூடாது. பூர்வபுண்ய தபோபலனை எடுத்துச்சொல்ல வேண்டியபோது அவைகளை பக்தியோடும் பெருமையோடும் எடுத்துச்சொல்ல வேண்டுமேயன்றி அலக்ஷியமாயும் சாமான்ய வசனங்களைக் கொண்டும் பேசலாகாது. அப்படிச் செய்வது கடவுளையே பழித்தது போலாகும். இன்னும் இது போல எவ்வளவோ விஷயங்களைக் குறிப்பிடலாம். அவற்றுள் முக்கியமான சிலவற்றையே இங்கு குறிப்பிட்டிருக்கிறேன். ஜோதிஷர் குளிர்ந்த முகமும் இனிய சொல்லுமுடைய ராயிருத்தல் வேண்டும். எவரிடத்திலும் வணக்கமும் மரியாதையும் காட்டவேண்டும். ஜோதிஷத்தில் அநுபவமுள்ள பெரியோர்கள் சொல்லும் விஷயங்களை அமிர்தம்போல் பூர்ணமாய் நம்பி நன்னெறியில் நடக்க வேண்டும். அப்படி நடக்கும் ஜோதிஷர்களே சிருடன் வாழமுடியும். ஜோதிஷன் ஜாதகபலன் சொல்வதை விளையாட்டாக நினைக்கவே கூடாது. அது ஒரு பெரிய பொறுப்பு, அதை வகிக்கச் சக்திபெற்ற பிறகே அதை ஏற்றுக்கொள்ள வேண்டும்,

தர்மமும் சாஸ்திரஞானமும் சாசுவதமான சம்பத்தை அளிக்கும்.

ஜோதிஷத் தொழிலில் சாஸ்திர விசாரணை கேட்டல், சிந்தித்துத் தெளிதல், இவை மிகவும் முக்கியமானவை. ஒருவன் சதாகாலமும் ஜாதகபலன் சொல்வதைப் பற்றியும் உலகானுபவத்தில் மனிதர்களின் மனப்போக்கைப் பற்றியும் சிந்தித்து வருவானேயானால், நிஜமான சாஸ்திரஞானம் மனதில் தானே படிந்துவிடும்.

உலகத்தில் எத்தனையோ தொழில் முறைகள் இருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொருவரே ஒவ்வோர் தொழிலில் சிறக்கின்றனர். ஒவ்வொரு தொழிலிலும் ஒருவன் தேர்ச்சியடையப் பலவருஷங்கள் இராப்பகலாக உழைக்க வேண்டி யிருக்கின்றது. இல்லையேல் பெருமை பெறத் தக்க அவ்வளவு தேர்ச்சியை ஒருவன் அடைந்துவிட முடியாது.

மற்றத் தொழில்களில் 100-க்கு 25-பேராவது நல்ல தேர்ச்சி யுடையவர்களாகி விடலாம். ஜோதிஷத் தொழிலில், அதிலும் பூர்வபுண்ணிய பலன்களை அறிந்து ஜாதக பலன் சொல்லும் திறமையில், ஆயிரத்தில் ஒருவன் வல்லவனாதலும் அரிதாக இருக்கின்றது. ஆகையால்தான் "தெய்வம் மானுஷரூபேண" என்பதுபோல் ஜோதிஷனைப் பேசும் தெய்வமாகக் கற்றறிந்த மேதாவிகள் கருதுகிறார்கள். 'தெய்வஞன்' என்னும் பெயரும் ஜோதிஷனுக்கு இதற்காகத்தான் ஏற்பட்டது போலும். ஆகையால் மற்றத் தொழிலுக்கு வேண்டிய ஞானத்தைவிட நூறுமடங்கு அதிகஞானம் ஜோதிஷனுக்கு இருக்கவேண்டும் உலகிலுள்ள சகல விஷயங்களும் நன்றாகத் தெரியவேண்டியதும் மிகவும் அவசியமாகும்.



## ஜோதிஷர்கள் பிரகாசிக்காம லிருப்பதேன் ?

ஜோதிஷர்கள் பிரகாசிக்காமல் இருப்பதற்கு இரண்டு
காரணங்கள் முக்கியமானவை. நன்றாய்க் கற்றுத்தேர்ந்து
பாண்டித்யமுடைய பெரியோர்கள் வைராக்ய ஆச்ரமத்
தில் இறங்கி விடுகிறார்கள். அவர்கள் தொழில் செய்வ
தில்லை. அவர்கள் உலகரீதியில் பழகிச் சகலருக்கும்
உபயோகமான விஷயங்களைச் சொல்ல முன் வருவதில்லை.
இது நமது நாட்டில் பெருங்குறையாக இருக்கின்றது.
ஆகையால், அவர்கள் படிப்பு கிருபணனின் தனம்போல
ஒருவருக்கும் பயன்படுவதில்லை. அதிகப் படிப்பில்லாத
வர்கள் அதிகமாய் உலகரீதியில் பழகி ஜோதிஷம் சொல்ல
ஆரம்பித்து விடுகிறார்கள். இது 'கானமயிலாடக் கண்டி
ருந்த வான்கோழி' போல 'கல்லாதான் கற்றகவி' யாய்
பிரகாசிக்காமல் இருந்து விடுகிறது. ஆகையால் உண்மை
ஞான முடையவர்கள் ஜோதிஷத் தொழில் செய்வதை
விடாமலிருக்க வேண்டும். பலன் சொல்ல முன்வரவேண்
டும். அரைகுறை ஞானமுடையவர்கள் கூடிய வரையில்
நன்றாய்த் தெரிந்துகொண்டு பலன் சொல்ல முற்பட
வேண்டும். அப்போது தான் ஜோதிஷ சாஸ்திரமும்,
ஜோதிஷர்களும், ஜாதகபலன் கேட்பவர்களும் பிரகாசிக்க
முடியும். "அரஸிக ஜனசம்பாஷணதோயா ரஸிக
ஜனஸ்ய வாக் கலகம் ச்ரேய :" என்றபடி வித்வான்களாக
இல்லாத அரசிகர்களுடன் பேசுவதைவிட வித்வான்
களான ரஸிகர்களுடன் சண்டை போடுவதே மேலா
னது என்பதுபோல், அரஸிகர்களான ஜோதிஷர்கள்
தானே வந்து ஜாதக பலன்களைத் தாறுமாறாகச் சொல்
வதைக் கேட்டுப் பலனடைவதைவிட நல்ல பாண்டித்ய
முடைய ரஸிகர்களான ஜோதிஷர்களை நாடி பலன்

கேட்டு கஷ்டப்படுவதேமேல் என்கின்ற கொள்கை தான் உத்தமர்களுக்குகந்தது. அப்போது தான் சாஸ்திரத்தின் நிஜஸ்வரூபத்தை அறியமுடியும்; பலனையும் அடையமுடியும். ஒவ்வொரு ஜோதிஷருக்கும் தான் வெற்றிபெற வேண்டுமென்ற எண்ணமிருக்கும். ஆனல் ஒரு சிலர் தான் அதற்கென்ன மார்க்கமோ அதைக் கடைப்பிடித்து ஒழுகுவார்கள். ஸர்வேச்வரனும் ஒரு தொழிலுக்கென்றே சிலரைப் பிறப்பித்திருக்கிறார். சில மேதாவிகளால்தான் முக்கிய விஷயத்தைக் கண்டுபிடிக்க முடிகின்றது. கொலம்பஸ், வாஸ்கோடி காமா, எடிஸன் போன்றவர்களும், கம்பன் காளிதாஸன், ஷேக்ஸ்பியர் போன்ற மஹா கவிகளும், ஆயிரக்கணக்காக இருந்தார்களா இருக்கிறார்களா? அவர்கள் கண்டு பிடித்தவைகளையும் எழுதி வைத்தவைகளையும் கொண்டு பலரும் பலனை அடைந்து வருகிறோம். அதுபோலவே ஜோதிஷ சாஸ்திரத்தை ஏற்படுத்தியவர்கள் அவதார புருஷர்கள் என்பதில் சந்தேகமில்லை. அதன் மஹிமை ஒரு சிலருக்குத் தான் புலப்படுகிறது. ஒரு மனிதருடன் சுமார் 15 வருஷகாலம் பழகினபோதும் அவர் மனோபாவத்தையும் குண விசேஷத்தையும் தெரிந்துகொள்ள முடிவதில்லை. ஒரு ஜாதகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே அவர்களின் குணமும் ஆயுள் வரையில் அவர்களுக்கு நடக்கப்போகிற பலன்களும் பிரத்யக்ஷமாய்த் தெரிந்து விடுகிறதென்றால். இதன் மஹிமையை மேதாவிகள் புகழாதிருக்க முடியுமா? இது ஜோதிஷத்தில் அனுபவமுள்ள உத்தமர்களுக்கே தெரிய வருகிறது. ஜோதிஷர்களாகிய நாம் இந்தத் தொழிலில் வல்லவர்கள் என்று புகழ் பெறுவோமாயின், அதைவிட அழியாச்செல்வம் நமக்கு வேறு கிடையாது. இதையறிந்து ஒவ்வொரு ஜோதிஷரும் இவ்வித்தையைக் கற்க

ஞயிரமாகப் பணம் கிடைத்துவிடாது. வருமானம் உபாயமாகவே யிருக்கும். எனினும் தினந்தோறும் தனக்குக் கிடைக்கும் தனத்தைக் கொண்டே திருப்தியடைய வேண்டும். அப்போதுதான் ஆயுள் பூராவும் நிரந்தரமான நற்பலனை தொடர்ச்சியாக அடைய முடியும்.

## ஜோதிஷர்களின் நடை, உடை பாவனைகள்

“வஸ்த்ரேண வபுஷா வாசா வித்யயா விநயேநச” என்கிறபடி ஜோதிஷர்களுக்கு துல்லியமான வஸ்த்ரம், ஆரோக்கியமான சரீரம், மதுரமான வாக் சாமர்த்தியம், சாஸ்த்ர ஆதாரமான வித்தை, பக்தியான வினயம் ஆகிய இவைகள் இருக்கவேண்டும். “நிரஸ்தேபாதபே தேசே ஏரண்டோபி த்ருமாயதே” என்கிறபடி மரமேயில்லாத தேசத்தில் ஆமணக்கே பெரிய விருக்ஷம் என்று நினைப்பார்களாம். அதுபோல உத்தம ஜோதிஷன் எப்படி இருப்பான் என்பதுகூட தற்காலத்தில் அநேகருக்குத் தெரிவதில்லை. உதாரணமாக, நாடகத்தில் ஜோதிஷனாக நடிப்பவன் வேஷம் தரிக்கும்போது கூட இந்தக் குறை காணப்படுகின்றது. ஜோதிஷர், வசிஷ்டர் முதலான மஹரிஷிகளைப் போல இருக்கவேண்டும், அல்லது பரமை காந்தியைப்போலும் மஹாகவிகளைப் போலும் அதி தேஜஸ்விகளாக இருக்கவேண்டும் இதை அறியாது வேஷதாரியாக நடிக்கும்போது கூட ஜோதிஷரின் புராதன உடையையும் கிழிந்த பஞ்சாங்கத்தையும் ஒட்டைப் பலகையையும் அவர் பேச்சின் வல்லமை யின்மையையும் அசட்டுச் சிரிப்பையும் பார்க்கும்போது எவரும் ஜோதிஷனைப் பற்றிப் பரிகசிக்காமல் இருக்கமுடியாது. இதிலிருந்தே ஜோதிஷர்களை எவ்வளவு தூரம் ஜனங்கள் அறிந்திருக்கிறார்கள் என்பது தெரியவருகிறதல்லவா? இவ்வளவுக்கும் காரணம் ஜனங்கள் வேதாங்கமான ஜோதிஷ சாஸ்திரத்தின் மஹிமையை அறியாமையேயன்றோ?



## விளம்பர விஷயம்

விளம்பரம் செய்து ஜோதிஷத் தொழிலை நடத்துவதே தற்காலத்திற்குப் பொருத்தமானது என்று ஏற்கனவே தெரிவித்துக் கொண்டிருக்கிறேன். இதிலும் சில அபவாதங்கள் இருக்கின்றன. அதாவது விளம்பரம் செய்துவரும் ஜோதிஷர்கள் நிஜமான பாண்டியத்யமுடையவர்களல்லர் என்றும், பணம் சம்பாதிப்பதற்காகவே ஏதோ பகட்டாக விளம்பரம் செய்கிறார்கள் என்றும் பலர் எண்ணுகிறார்கள். விளம்பரம் செய்துவிட்டால் பணம் சம்பாதித்துவிடலாம் என்பது பகல் கனவேயாகும். நிஜமான யோக்கியதை இருந்தாலன்றி, விளம்பரத்தால் மாத்திரம் பணம் கிடைத்துவிடாது என்பதைப் பொது ஜனங்கள் அறியவேண்டும். தவிர விளம்பரம் செய்பவர்களும் தாம் இருக்கும் இடத்தையும், தம்மை நேரில் கண்டு பேசக்கூடிய சமயத்தையும், தம் யோக்யதையையும் விளக்கமாகத் தெரிவிப்பதில்லை. சில ஜோதிஷ விளம்பரங்களில் தங்களைப் பார்க்கக்கூடாது என்கிறார்கள். மற்றும் சில விளம்பரங்களில் போஸ்டுபாக்ஸ் அட்ரஸ்தான் இருக்கிறது. வேறு சில விளம்பரங்களில் ஆபீஸ் பெயர் மாத்திரம் இருக்கின்றது. ஜோதிஷர் யார் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. யாரேனும் அவரை நேரில் பார்த்துப் பேசத் தேடி வரினும் ஜோதிஷரைப் பார்க்க முடிவதில்லை. சிலர் நேரில் பேசவும் மறுக்கின்றனர். ஆனால் கேள்விகளுக்கு மாத்திரம் அந்த ஆபீசுகளின் மூலம் எப்படியோ போஸ்டு மூலமாக பதில் வி.பி யில் வெகு சீக்கிரம் கிடைத்துவிடுகிறது. இவையெல்லாம்

பொதுஜனங்களின்சந்தேகத்தை பலப்படுத்திவிடுகின்றன.
மற்றுஞ் சிலர் வைத்துக்கொள்ளும் பேரே வெகு விசித்தி
ரம், அவர்களும் ஜோதிஷம் சொல்லுகிறேன் என்கிறார்கள்.
உதாரணமாக 'மணிமந்த்ர தந்த்ர மெஸ்மரிஸ உபாசகர்'
என்றால், இவரை நாம் என்னவென்று எண்ணுவது?
அவர்களை ஜோதிஷம் தெரிந்தவர் ஏதேனும் கேட்டால்
'நான் உபவாஸி' என்கிறார்கள்; உபாசகர்கள் கேட்
டால் ஜோதிஷன் என்கிறார்கள். இன்னும் பலவிதமான
இங்கிலீஷ் மந்த்ரம் இங்கிலீஷ் ஜோஸ்யம் என்றும், ஹிப்
னடிஸம் என்றும் சமயம்போல் கேட்பதற்கு மாறாக எதி
லும் படாமல் பதில்சொல்லுகிறார்கள். இதைப் பற்றிச்
சில இங்கிலீஷ் பத்திரிகைகளும் கண்டித்து எழுதி வரு
கின்றன. விவரமாக எழுதுவதானால் இதுவே ஒரு புராண
மாகிவிடும். இப்படியெல்லாம் உத்தம ஜோதிஷர்கள்
செய்யலாகாது. விளம்பரங்களில் நான் ஜாதகபலன்களைச்
சொல்ல வல்லவன்; அல்லது ரேகை சாஸ்திர நிபுணன்;
அல்லது பலானவன் பலான விதமாக பலான சாஸ்திர
ஆதாரத்தைக் கொண்டு பலன் சொல்பவன்; மந்த்ர சக்தியி
னால் சகல விஷயங்களையும் சொல்பவன்; இன்னின்ன
விஷயத்தை என்னால் செய்யமுடியும் சொல்ல முடியும்;
என்பவைகளைப் பொதுஜனங்கள் தெளிவாகத் தெரிந்து
கொள்ளும்படி விளம்பரம் செய்யவேண்டும். யார்
நம்மை யடுத்து விஷயங்களைக் கேட்டாலும் தெரிந்த
விஷயத்தை நன்றாகச் சொல்லவேண்டும். அப்போது
தான் விளம்பரம் செய்யும் ஜோதிஷர்களிடம் பொது
ஜனங்களுக்கு நம்பிக்கை ஏற்படும்; விளம்பரம் செய்யும்
ஜோதிஷர்களும் சுகப்பட முடியும். தங்களுக்கு இன்
னும் தெரிந்த விஷயங்களை அவ்வப்போது பொது
ஜனங்களுக்கு உபகாரமாக சகலரும் அறியும்படி சாஸ்திர



ஆதாரங்களுடன் எழுதிவரவேண்டும். இதனால் சகலரும்
ஜோதிஷர்களின் திறமையையும் சாஸ்திரத்தின் மஹிமை
யையும் நன்றாய் அறிந்துகொள்ள முடியும்; விளம்பரம்
செய்பவர்கள் உத்தம பாண்டித்ய முடையவர்கள் என்ற
பெயர் நிலைநிற்கும். அப்போதுதான் விளம்பரம் செய்
யும் ஜோதிஷர்களும் வெற்றிபெற முடியும். கண்ணியமாய்
ஜீவனம் செய்ய முடியும் என்பதையும் என்னுடைய
சகோதர ஜோதிஷர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.
ஆஸ்திகர்கள் அனைவரும் ஒரு தொழிலில் வல்லவராக
இருக்கும் சிறந்த அறிவாளியைக் கொண்டே அந்தத்
தொழிலை மதிக்கவேண்டும். எந்தத் தொழிலிலும் சில
சாமான்யர்க ளிருப்பார்கள். அழுகின பழத்தைக்
கொண்டு பல விருக்ஷத்தையும், புகையைக் கொண்டு
அக்னியையும், சாமான்னிய ஜோதிஷர்களைக் கொண்டு
ஜோதிஷத் தொழிலையும் ஜோதிஷ சாஸ்திரத்தையும்
மதிக்கலாகாதென்று தெரிவித்துக் கொள்கிறேன்.
ஜோதிஷன் ஜாதக பலன்களைச் சொல்லுவதில்
குதூஹல முடையவனாக இருக்கவேண்டும். ஜாதகபலன்
சொல்வதில் மனக்கிளர்ச்சி இல்லாதவனுக்கு இடம்,
பொருள், ஏவல் சூழ்நிலை மற்றெல்லா சாதனமும் இருந்த
போதிலும், அவர்கள் சாஸ்திரஞானம், ஊமை கற்ற
கல்வியைப் போலவும், குருடன் கைவிளக்குப் போலவும்,
மற் ஆகிவிடும் உண்மையில், சிறந்த பலனடைவதற்கு
ஊக்கமே முதற் காரணமாகும். ஜாதக பலன்களைச்
சொல்லி மேன்மை பெற விரும்புகிறவர்கள் புகழ் தருவன
வான முக்கிய பலன்களைச் சொல்ல சதா சிந்தித்து வர
வேண்டும். அப்படிச் சிந்தித்து வருபவர்களால்தான் ஜாதக
பலனைச் சரியாகத் தான் நினைப்பதுபோல் சொல்ல முடி
யும். ஒருவேளை அவ்வளவு மேன்மை அடைய முடியா

விடினும், சாமான்யர்களாகக் கருதப்படமாட்டார்கள் என்பது நிச்சயம்.

உத்சாகமும் ஊக்கமும் இல்லாத ஜோதிஷனுக்கு எவ்விதமான வெகுமதியையும் பெற உரிமை கிடையாது ஊக்கமுடைய ஜோதிஷனே உயர்வடைய வேண்டியவனாவான்.

சிலருக்கு ஜோதிஷம் நன்ருய்த் தெரிந்து இருக்கும். மற்றும் சிலருக்கு பிறருக்கு ஜாதகபலனை எடுத்துச் சொல்லும் திறமை மாத்திரம் விசேஷமாக இருக்கும். இவ்விரண்டும் யாரிடத்தில் ஒத்திருக்கின்றதோ அவர்களே உத்தம ஜோதிஷர்களாவார்.

ஜோதிஷக் கலையில் விசேஷ பாண்டித்யமிருந்து ஜாதக பலன்களைச் சொல்லவேண்டிய போது புலி துரத்திய மானைப்போல் மிரள மிரள விழிப்பவரை விட ஜோதிஷ சாஸ்திர ஞானம் சாமான்யமாக இருந்த போதிலும் உபயோகமாயுள்ள பல பாக விஷயங்களை கம்பீரமாக எடுத்துச் சொல்பவர்களே மேலானவர்கள் என்பது எனது அபிப்பிராயம். இவ்விருவரும் கல்வியில் வலலவர்கள் தான் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதே.

மற்ற சாஸ்திரங்களைப் போல இந்த சாஸ்திரத்தை வாத விவாதமான தர்க்க ரீதியில் வாய்ப் பேச்சைக் கொண்டு பரீக்ஷை செய்வது உசிதமில்லை. இதில் நடக்க வேண்டிய தசாபலன்களைச் சரியாகச் சொல்பவர்களே சிறந்தவர்கள். அதைக் கொண்டுதான் பரீக்ஷை செய்ய வேண்டும். ஜோதிஷனுக்கு ஜாதக பலனைச் சொல்லும் போது குரு சிஷ்யனுக்கு உபதேசிப்பது போல் சற்று சுதந்திரமுடையவர்களா யிருக்க அதிகாரமுண்டு. தைரியமாகப் பலன் சொல்லாவிடில், ஜாதகங்களுக்கும் ஜோதிஷம் சொல்பவரிடம் மதிப்பும் லக்ஷியமும் இராது. ஜாதகர்

பலன் சொல்லுவதற்கு நல்ல சாஸ்திர ஞானத்தோடு சமயோசிதமான மனோதர்மமும், அதன்படி காரியத்தை நிர்வகிக்கும் திறமையும் வாக்வன்மையும், அநுபவஞானமும், தெய்வாநுகூலமும் வேண்டும். அநுபவஞானம் பெறுவதற்கு முன்பே அத் தொழிலில் தேர்ச்சியுள்ளவர்களிடம் சேர்ந்து பழகவேண்டும். எந்தத் தொழிலுக்கும் அது அவசியமாகும். டாக்டர், வக்கீல், என்ஜினீயர் முதலிய தொழிலில் பெரிய உத்தியோகங்களை வகிப்பவர்கள் அவரவர்க்குரிய பரீக்ஷையில் தேரிய பிறகு நல்ல அநுபவமுள்ள ஒருவரிடம் உதவியாளராக இருந்து பழகுவது எல்லோரும் அறிந்த விஷயம். அப்படிப் பழகுவோரில் சிலர் தம்மைப் பழக்கின வரை விட நிபுணர்களாகவும், வியாபகர்களாகவும் ஆகிவிடுகிறார்கள். சிலர் சாதாரணமாகவே இருந்துவிடுகிறார்கள். அது அவரவர் அதிர்ஷ்டாநுசாரமான பாக்யத்தையும் சாமர்த்தியத்தையும் பொறுத்தது. எப்படியானாலும் மேற்கூறியவாறு பழகவேண்டியது அவசியம் என்பதை ஒருவரும் மறுக்க முடியாது.

எந்தத் தொழிலிலும் திடசித்தத்துடன் ப்ரவேசிக்க வேண்டும். ஒருவன் நீந்தக் கற்றுக்கொள்ள நினைப்பதாக வைத்துக்கொள்வோம். அதற்குரிய முறைகளை அவன் தண்ணீரில் இறங்காமல் எவ்வளவு கற்றுக்கொண்டாலும் பயனென்ன? அதுபோலவே ஜோதிஷன் ஜாதக பலன் சொல்லும் முறையில் சந்தேகத்திற்கு இடங் கொடுக்காமல் தைரியத்துடன் ஜாதகபலன்களை சொல்லப் பழகவேண்டுமெனின் அதற்கு ஒரு சிறந்த ஜோதிஷனை அடுத்து அவனிடம் உபதேசம் பெற்று, அவன் அநுஷ்டிக்கும் முறைகளில் பழகி வரவேண்டும். இந்த ஜோதிஷனை எப்படி அறிவது? அதை ஜோதிஷன் ஒரு ஜாதகத்

காலம் கற்றால் தான் ஸ்கூல் பைனலில் தேர்ந்ததற்குச் சமானமாகலாம். அதற்குமேல் படிக்க வேண்டாமென்று யார் சொல்லமுடியும்? ஆகையால் இதன்பிறகு மேன் மேலும் கற்பதற்குத் தகுந்தபடி நல்லதேர்ச்சியடையலாம். அனுபவ ஞானத்தை விரைவில் தேடிக்கொள்ளலாம். அப்படிக்கற்றறிந்த பின் ஜாதக கணிதம் செய்து பலன் சொல்வதில் இக்காலத்திற் கேற்றபடி சில நாகரிக முறைகளைக் கையாளுவது நலம். அது ஜனங்களின் மனதைக் கவர்வதற்கு அநுகூலமாயிருக்கும்.

## ஒற்றுமைவேண்டும்

ஜோதிஷர்கள் பரஸ்பரம் அன்புடையுவர்களாக இருக்க வேண்டும். தாம் பெரியோர்களிடம் கேட்ட விஷயங்களை நாள்தோறும் பலதாமும் சிந்தித்தலும், ஒருவரை ஒருவர் அடுத்துத் தமக்குச் சந்தேகமாக வுள்ளவைகளைக் கேட்டுத் தெளிதலும், பலருடன் நேசமாய்ப் பழகுதலும், தமக்குத் தெரியாதவற்றைக் கேட்டுத் தெரிந்துகொள்ளுதலும், தம்மைக் கேட்டவைகளுக்கு சரியாக பதில்சொல்லுதலும், தமக்குத் தெரிந்தவற்றைப் பிறருக்கு உபதேசித்தலும் என்ற இவைகளெல்லாம் ஜோதிஷர்களுக்குள்ள கடமையாகும். சிறந்த விவேகிகளாக விருப்பினும் ஜோதிஷ சாஸ்திரத்தில் சிலநாள் பழக்கத்தினால் வல்லவராதல் அரிது, பலநாள் பழக்கப்படின் மந்தர்களும் வல்லவாகளாகலாம். ஜோதிஷத்தில் தேர்ச்சியடைய வேண்டுமானால் ஊக்கமாகவும் உத்ஸாகத்துடனும் கற்கவேண்டும். சோர்வடையாமல் நாள்தோறும் கொஞ்சமேனும் நன்றாகக் கற்பவர் எப்படியும் அறிவில் மிகுவர். தாம் அதிக சமர்த்தர் என்றெண்ணிச் சிலவேளையில் மாத்திரம் கற்பவர் அதிகமாகத் தேர்ச்சியடையமாட்டார்கள். தற்காலத்தில்

என்று தெரியவருகிறது. இவ்வளவு கஷ்டங்களுக் கிடையில் ஜோதிஷன் தன் தொழிலை நடத்தவேண்டியிருக்கிறது. இதனால் இக்காலத்தில் சகலரும் ஜோதிஷர்களென்று சொல்லிக்கொள்ளமுடிவதுடன், கற்றோருக்கும், கல்லாதவர்க்கும் வித்தியாசமில்லாமலு மிருக்கின்றது. இதைச் சீர்திருத்தம் செய்ய ஜோதிஷ உத்தமர்களும், ஜோதிஷ ஆஸ்திகர்களும் ஒத்துழைத்து ஒரு முடிவிற்கு வரவேண்டுமென்பது என் அந்தரங்க ஆவல். ஆகவே என் அனுபவத்தில் யான் அறிந்த சிலவற்றைத் தான் தொடர்ச்சியாக சிறு சிறு புத்தகங்களாக எழுதி வருகிறேன். இதுபோல இன்னும் அனேக ஜோதிஷ உத்தமர்களும் அவரவர்கள் அபிப்பிராயத்தையும் அனுபவத்தையும் எழுதி வருவார்களானால் லோகோபகாரமாக இருக்கும்.

## ஜோதிஷத்தொழில்

ஜோதிஷத்தை ஜீவனோபாயமாக வைத்துக்கொண்டு தொழிலை நடத்தி வருவது தான் இக்காலத்திற்கு மிகவும் பொருத்தமானதாக இருக்கிறது. சிலராவது ஜோதிஷத்தைத் தொழிலாக வைத்துக்கொண்டு நடத்தி வருகிறார்களே என்பதைப்பற்றி ஆஸ்திகர்கள் ஒவ்வொருவரும் சந்தோஷிக்க வேண்டும். ஜோதிஷர்களுக்குக் கொடுக்கும் பணம் வெகுஸ்வல்பம். உண்மையான ஜோதிஷனால் சகலருக்கும் உண்டாகும் அனுகூலம் அபாரமானது. ஜோதிஷன் சம்பாத்யம் செய்து பணக்காரனாகிவிட முயற்சி செய்யான். ஏனெனில் அவனுக்கு நாழிமுகவாது நானாழி என்பது நன்றாகத்தெரியும், ஒருவேளை விசேஷதனம் கிடைப்பினும் அதை அவன் தரும மார்கத்திலேயே செலவிடுவான் ஜோதிஷன் ஆடம்பரமின்றித் தன்னைப் போஷித்துக் கொள்ளவாவது ஸ்வல்ப பணம்வேண்டாமா? ஆகையால்



ஜோதிஷர்களுக்குப் பண உதவி செய்வதைப் பரம புண்ணியமாகவே சகலரும் பாவிக்கவேண்டும்.

"நிராதாரா நசோபந்தே பண்டிதா வநிதாலதா" என்று மஹாகவி காளிதாஸன் ஓரிடத்தில் சொன்னது ஞாபகத்திற்கு வருகிறது. அதாவது, பிரபுக்களின் ஆதரவின்றி வித்வான்களும், பிதா பர்த்தா புத்திரர்களின் ஆதரவின்றி ஸ்திரீகளும், ஒரு கொழுகொம்பின் ஆதரவின்றி புஷ்பக்கொடிகளும் சோபிக்க முடியாதென்பது தாத்பர்யம். வித்வான்களின் முன்னேற்றத்திற்குப் பெரும்பாலும் பிரபுக்களின் உதவிதான் காரணமாக இருந்திருக்கின்றது. கம்பர், காளிதாஸன் போன்ற மஹா வித்வான்களும் தங்கள் ஜீவனத்தை மஹா ராஜாக்கள் பிரபுக்கள் முதலியவர்களின் ஆதரவால் நடத்திவந்தவர்களே. அக்காலத்தில் பல மன்னர்களும் பிரபுக்களும் வித்வான்களை ஆதரித்து வந்தார்கள். இக்காலத்தில் இதுபோன்ற கதைகளைச் சொல்வதே சிலருக்கு வெறுப்பாகத் தோன்றும். ஆனாலும் இக்காலத்திலுள்ள பிரபுக்கள் தம்மை போஜ மஹா ராஜாவாகவும், தற்காலத்திலுள்ள ஜோதிஷர்களை மஹாகவி காளிதாஸனைப் போன்றும் தாம் வஸிக்குமிடத்தை ராஜஸபையாகவும் பாவித்து பரஸ்பரம் ஒத்துழைத்தால் கடவுளின் அனுக்கிரஹம் கிடைத்துச் சகலரும் நன்மையடையலாம் என்பதை விநயத்துடன் இங்கே தெரிவித்துக்கொள்கிறேன்.

ஜோதிஷத்தொழிலை நடத்த எவ்வாறான திறமை இருக்கவேண்டும்? என்பது அனேகருக்குத் தெரிவதில்லை. யார் வேண்டுமானாலும் தாம் ஜோதிஷம் சொல்லிவிடலாம்; தொழிலை நடத்திப் பணத்தையும் கியாதியையும் சம்பாதித்துவிடலாம் என்று நினைக்கிறார்கள். அது சாத்தியமில்லாத காரியம். ஒரு சிலருக்குத்தான்

ஜோதிஷத் தொழிலைத் திறமையாய் நடத்த சுபாவமான யோக்யதை இருக்கும். சிலர் இத் தொழிலை ஆரம்பித்து நடத்துகிறார்கள். இடையிற் சில இடையூறுகள் ஏற்பட்டால் உடனே இதை விட்டுவிடுகிறார்கள். மற்றும் சிலர் நல்லபடிப் பாளிகளாக இருக்கிறார்கள்; கேட்ட கேள்விகளுக்குத் தகுந்த சமாதானமும் சொல்லுகிறார்கள். ஆனால், தொழிலாக நடத்தவேண்டி வரும் போது பல கஷ்டங்கள் குறுக்கிடுகின்றன. உடனே மனம் சலித்து விட்டு விடுகிறார்கள். பிறகு அவர்களுக்கு ஜோதிஷத் தொழில் என்றாலே வேப்பங்காயைப்போல இருக்கிறது. திடமான தன்னம்பிக்கையும், சகிப்புத் தன்மையும், நிர்வாகத்திறமையும், ஆத்ம சக்தியும், முறை தவறாமல் நடக்கும் குணமும் உள்ளவர்களுக்குத்தான் ஜோதிஷத்தொழிலை நடத்துவது சுலபமாக இருக்கும். இக் குணங்கள் அமையப் பெறாதவர்கள் இத்தொழிலில் பிரவேசியாமலிருப்பதே மேலானது. தொழிலில் இது சிறியது, இது பெரியது, இது தாழ்வானது, இது உயர்வானது என்றெண்ணி அதனால் அவ்வவ் வேலையைச் செய்வோரை நாம் தாழ்வாகவோ உயர்வாகவோ கருதி விடலாகாது. அவன் அவ்வேலையை எவ்வாறாகச் செய்கிறான் என்பதையே ஆராயவேண்டும். ஒருவன் தன் வேலையைச் செய்யும் விதமும் திறனும் ஆகிய இவ்விரண்டுமே அதைச் செய்பவனை அறியுங்கருவிகளாகும். ‘செய்வன திருந்தச்செய்’ என்பதுபோல், திறம் படத்தம் தொழிலைச் செய்பவனே சிறந்த அறிவாளியும், மேலானவனுமாவான். உதாரணமாக மூக்குப் பொடிக்கடை, வைர வியாபாரக்கடை வைத்து நடத்துபவர்கள் இருவரும் வியாபாரிகளே. இந்த வஸ்துவைக்கொண்டு வியாபார மேன்மையையாவது தாழ்மையையாவது குறிப்பிட

ஜோதிஷத் தொழிலைத் திறமையாய் நடத்த சுபாவமான யோக்யதை இருக்கும். சிலர் இத் தொழிலை ஆரம்பித்து நடத்துகிறார்கள். இடையிற் சில இடையூறுகள் ஏற்பட்டால் உடனே இதை விட்டுவிடுகிறார்கள். மற்றும் சிலர் நல்லபடிப் பாளிகளாக இருக்கிறார்கள்; கேட்ட கேள்விகளுக்குத் தகுந்த சமாதானமும் சொல்லுகிறார்கள். ஆனால், தொழிலாக நடத்தவேண்டி வரும் போது பல கஷ்டங்கள் குறுக்கிடுகின்றன. உடனே மனம் சலித்து விட்டு விடுகிறார்கள். பிறகு அவர்களுக்கு ஜோதிஷத் தொழில் என்றாலே வேப்பங்காயைப்போல இருக்கிறது. திடமான தன்னம்பிக்கையும், சகிப்புத் தன்மையும், நிர்வாகத்திறமையும், ஆத்ம சக்தியும், முறை தவறாமல் நடக்கும் குணமும் உள்ளவர்களுக்குத்தான் ஜோதிஷத்தொழிலை நடத்துவது சுலபமாக இருக்கும். இக் குணங்கள் அமையப் பெறாதவர்கள் இத்தொழிலில் பிரவேசியாமலிருப்பதே மேலானது. தொழிலில் இது சிறியது, இது பெரியது, இது தாழ்வானது, இது உயர்வானது என்றெண்ணி அதனால் அவ்வவ் வேலையைச் செய்வோரை நாம் தாழ்வாகவோ உயர்வாகவோ கருதி விடலாகாது. அவன் அவ்வேலையை எவ்வாறாகச் செய்கிறான் என்பதையே ஆராயவேண்டும். ஒருவன் தன் வேலையைச் செய்யும் விதமும் திறனும் ஆகிய இவ்விரண்டுமே அதைச் செய்பவனை அறியுங்கருவிகளாகும். 'செய்வன திருந்தச்செய்' என்பதுபோல், திறம் படத்தம் தொழிலைச் செய்பவனே சிறந்த அறிவாளியும், மேலானவனுமாவான். உதாரணமாக மூக்குப் பொடிக்கடை, வைர வியாபாரக்கடை வைத்து நடத்துபவர்கள் இருவரும் வியாபாரிகளே. இந்த வஸ்துவைக்கொண்டு வியாபார மேன்மையையாவது தாழ்மையையாவது குறிப்பிட

வானதாக நினைக்கின்றனர். அபூர்வமாக படித்துத் தேர்ந்தவர்களில் யாரேனும் இந்தத்தொழிலை ஆரம்பித்தாலும் அவர்களை அதைரியப்படுத்தி விடுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும். ஜோதிஷத் தொழிலை நடத்த முன் வருபவருக்குச் சகலரும் ஊக்கமும் உத்ஸாஹமும் உண்டாகச் செய்யவேண்டும். அப்போது தான் ஜோதிஷ சாஸ்திரத்தின் பயனைச் சகலரும் எளிதில் பெறமுடியும்.

எப்படி ஜோதிஷத் தொழிலை ஆரம்பிப்பது, எப்படி நடத்துவது, எப்படி விருத்தி செய்வது என்பனவற்றை விவரிப்பது பெரியகாரியம். ஆயினும் என்னால் கூடிய வரை இதைப்பற்றி எழுதுகிறேன்.

மஹா மேதாவியாக இருப்பினும் எவ்வளவுதான் உழைப்பும் ஊக்கமும் உத்ஸாஹமு மிருப்பினும் அனுபவமில்லாவிடின் ஜோதிஷத்தொழிலைச் சிறப்புற நடத்த முடியாது.

சர்க்கரையைப்பற்றி எவ்வளவுதான் படித்திருந்தாலும் அதனை உண்டாலன்றி அதன் ருசியை யாரும் சரிவர அறியமுடியாது. அதுபோலவே தொழிலை ஆரம்பித்து நடத்தினாலொழிய அனுபவம் ஏற்படமுடியாது. சிறந்த அனுபவம் வேண்டுமாயின் ஸ்திரபுத்தியுடன் மனதைக் கட்டுப்படுத்தி உலகவிஷயங்களைத் பலவகையாலும் தெரிந்துகொள்ளவேண்டும். ஜனங்களின் மனப்போக்கையும், நோக்கத்தையும், குணத்தையும், கூடியவரை தெரிந்து நடக்கவேண்டும். இதற்கு நல்லபுத்தி சாமர்த்திய மிருந்தால் மாத்திரமே முடியும்.

சில புத்தகங்களிற் படித்தவைகளைமாத்திரம் ஆதாரமாகக்கொண்டு ஜோதிஷத் தொழிலை நடத்திவிட முடி

களை பரிசீலனை செய்து பார்ப்பதும், நாம் சொல்லும் அப்பலன்கள் அனுபவத்தில் எவ்வாறு இருக்கின்றன என்பதை அறிதலுமே யாகும்.

ஜ்யோதிஷ க்ரந்தங்களில் மிகவும் முக்கியமானது 'பிருகத்ஜாதகம்'; இதை இயற்றியவர் வராஹமிஹிரர்; இவரே 'பிருஹத் ஸம்ஹிதை', 'யாத்ரா', 'ஹோராரத்நம்' முதலிய பல க்ரந்தங்களைச் செய்திருக்கிறார். மற்றும் வைத்யநாத தீக்ஷிதர் என்பவர் "ஜாதக பாரிஜாதம்" என்னும் மிகச்சிறந்த க்ரந்தத்தைச் செய்திருக்கிறார். மந்த்ரேச்வரர் என்பவர் 'பல தீபிகை' என்னும் க்ரந்தத்தையும், கல்யாணவர்மன் என்னும் அரசர் 'ஸாராவளி' என்னும் க்ரந்தத்தையும், வெங்கடேச தெய்வஞர் 'சர்வார்த்த சிந்தாமணி' என்பதையும் மஹாதேவன் என்பவர் சூத்திரங்களாலாகிய 'ஜாதகதத்வம்' என்பதையும் மிகவும் கருணையுடன் இயற்றி உலகிற்கு உதவி இருக்கின்றனர். இவைகளெல்லாம் வடமொழியில் உள்ளவை. இவைகளையே ஜோதிஷ மூலக்ரந்தங்கள் என்று சொல்லலாம். இன்னும் வடமொழியில் இயற்றப்பட்ட ஜோதிஷ க்ரந்தங்கள் அநேகம் இருக்கின்றன. இவ்விவரங்களை இதில் ஆரம்பத்திலேயே தெரிவித்துக் கொண்டிருக்கிறேன்.

தமிழிலும், மற்ற பாஷைகளிலும் அநேக ஜோதிஷ புஸ்தகங்கள் அநேகரால் இயற்றப்பட்டுள்ளன. இவைகளுள் பாட்டாகவும் வசனமாகவும், பல ரஸமான விஷயங்கள் அடங்கிய நூல்கள் பல இருக்கின்றன. தமிழ்ப் புத்தகங்களில் முக்கியமானவை சாதகாலங்காரம், குமாரசுவாமியம், ஆதி சங்கராசரியம், வருஷாதி நூல், கௌசிக சிந்தாமணி, புலிப்பாணி ஜோதிஷம், நந்தி வாக்கியம், கார்க்கேயர் சிற்பம், மங்களேசுவரீயம், ஜோதிட குணகரம் சுந்திரசேகரம் முதலியவைகளாகும்.

சொல்லுவதில் ஒவ்வொன்றுக்கும் ஸ்லோகபூர்வகமாக ப்ரமாணங்களையும், ஆதாரங்களையும் குறிப்பிட்டு அவ் வாதாரங்களுக்குள்ள ஆக்ஷேபனைகள், சமாதானங்கள், ஸித்தாந்தங்கள், இவ்வளவையும் கவனித்து விமரிசித்துச் சொல்லவேண்டும். இதுபோல் ஜாதக துவாதச பாவபலன்களை கோர்வையாக அழகு படுத்தித் தொடர்ச்சியாகச் சொல்லிப் பழகித் தேர்ச்சி யடைய வேண்டும் இதுதான் சரியான கிரமம். இந்த கிரமம் ஆரம்பத்தில், புதிதாக ஜாதக பலன்கள் சொல்ல ஆரம்பிக்கும் காலங்களில் சில வருஷங்கள் வரையில் வெகு சிரமமாகத் தோன்றலாம். பலர் பரிகாசத்திற்கும் ஆளாக நேரிடக்கூடும். நாம் சொல்லும் பலன்கள் வாஸ்தவமானவையே யாயினும், பலருக்கு அவர்கள் ருசிக்கொப்ப நாம் பலன் சொல்ல முடியாமற் போய் விடும்போது அதை அனேகர் ரஸிக்கமாட்டார்கள். இம்மாதிரிப் பலனைச் சொன்னாலும் கஷ்டம், சொல்லாமல் விட்டு விட்டாலும் அசட்டுப்பட்டம். இவ்வாறு இருப்பினும், இவைகளைக் கண்டு மனமுடையாமல் சாஸ்திரங்களை அனுஸரித்தே நாம் பலன்களை உள்ளது உள்ள படி சொல்லிக்கொண்டே போகவேண்டும். பலன்கள் நாளடைவில் நாம் சொன்னபடியே சரியாக நடப்பதை ப்ரத்யக்ஷத்தில் காணலாம். முதலில் பரிகசித்தவர்களுக்கும் இவ்விஷயம் மனதில் பதியும்; ஆனால் இதை அவர்களில் அநேகர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். வெளிக்குக் காட்டிக்கொள்ள மாட்டார்கள். இதை நாமும் தெரிந்து கொள்ளாததுபோல் இருந்துவிட வேண்டும். இப்படிப்பட்டவர்கள் நாளடைவில் தானே திருந்தி விடுவார்கள்.

உங்கள் ஜாதகமாக இருக்காது'' என்று நாம் சொல்ல வேண்டும். அவர்கள் உடனே, "இல்லை இல்லை இது என் ஜாதகம்தான்'' என்பர்கள். அதற்கு நாம் "ஜாதகத்தில் ஏதேனும் ஸ்வல்ப பிசகு இருக்கலாம்'' என்று சொல்லி விடலாம். அவர்களும் "இது ஒன்றுதான் சரியாகவில்லையே யன்றி மற்றதெல்லாம் (அதாவது நல்லதெல்லாம்) நீங்கள் சொன்னது அவ்வளவும் ரொம்பவும் பொருத்தமாகவும் சரியாகவும் இருக்கின்றது'' என்பார்கள். "ஆமாமாம்; அப்படியும் இருக்கலாம்; நல்லதையே நாம் எடுத்துக்கொள்வோமே; அல்லது ஏதேனும் நான் சொன்னபடி கெடுதியான குணமிருப்பின் திருத்திக்கொண்டால் ஆயிற்று; இதை நாம் பொருள் படுத்துவானேன்; ஏதோ ஜோஸ்யத்திலுள்ளதை நான் சொன்னேன்; அவ்வளவு தான்'' என்று நாம் சொல்லி விடலாம். இப்படிச் சொல்வதால் இரண்டுவித அனுகூலம் உண்டு. ஒன்று நமக்கு ஜோஸ்யத்தில் எவ்வளவு தூரம் நிஜமாக உள்ள அவர்கள் ஆந்த்ரீக குணத்தைத் தெரிந்துகொள்ள முடிகிறது என்பது முதலாவது. அவர்கள் அதை ஒப்புக்கொள்ள வில்லையேயன்றி விஷயம் வாஸ்தவம்தான் என்பது அவர்களுக்கு விளங்குகிறது. இது இரண்டாவது

இம்மாதிரி நைச்யமாக ஒன்றும் அறியாதவன் போல் ஜாதகபலனைச் சொல்ல ஆரம்பித்து, ஒவ்வொரு ஸ்தானபலனும் சொல்லி முடிந்ததும் மேன்மேலும் பலன்களை சரமாரியாகச் சொல்லிக்கொண்டே உதயகால சூரியன்போல் ஓங்கிவிடவேண்டும்; கல்பனையின் வேகப்படி தைரியமாக ஜாதக பலன்களை ஒழுங்காகச் சொல்லி முடிக்கவேண்டும். இம்மாதிரியாக ஜாதக பலன்களைச் சரியாகச் சொல்லி தேர்ச்சிபெற அவரவர்களின் மேதைக்குத் தக்கபடி சிலருக்கு சில வருஷங்கள், சிலருக்குப் பல

வருஷங்கள் ஆகலாம். இம்மாதிரியான முறையில் தேர்ந்துவிடில் இப்படிப்பட்ட ஜோதிஷனை யாரும் வெல்ல முடியாது. இம்முறையைக் கையாள்பவனே தெய்வஞன் உத்தம ஜோதிஷன்.

அடுத்தபடி இதுபோல் நாம் பலன் சொன்னதும் மேற்படி குணமுடைய ஜாதகர்கள் கட்டாயம் தங்களை திருத்திக்கொள்ளவே முற்படுவார்கள். இது நிச்சயம். இந்த ஞாபகந்தான் அவர்களுக்கு எப்பொழுதும் எங்கும் முன்னிலையில் நிற்கும். இவர்களை வழிப்படுத்த இதுதான் சரியானமார்கம். இது இரண்டாவது அநுகூலம்.

இதற்காசத்தான் இந்த ஜாதகத்திற்கு பலன் ஜோஸ்யத்தில் உள்ளபடி எதோ எனக்குத் தெரிந்த வரையில் சொல்லுகிறேன் என்று ஆரம்பிக்க வேண்டும் என்பது.

பலபேர் மத்தியில் இம்மாதிரி ஒருவருடைய ஜாதக பலனைச் சொல்ல வேண்டியபோது இப்படி ஆரம்பித்துவிடில் யாருக்கும் மனம் கோணுமல் பலன்கள் பூராவையும் நல்லவை கெட்டவைகளை வெகு அழகாகச் சொல்லிவிடலாம்.

ஜாதகங்களில் ராஜயோகமாக உள்ள சுப பலன்களை எவ்வளவு வேண்டினும் உயர்த்தி அழகுபடுத்தி அதிகமாக வர்ணனைகளுடன் ஜாதகர்களுக்கு எடுத்துச் சொல்லலாம். இதைப்போல் ஜாதகத்திலுள்ள கெட்ட பலன்களை அல்லது தோஷங்களைச் சொல்லலாகாது. கூடியவரை அசுப பலன்களை குறைத்தும் ஜாதகர்களின் மனம் புண்படாதபடியும் அவர்களுக்கு அதைரியம் உண்டாகாதபடிக்கும் பக்குவமாகச் சொல்லவேண்டும். இவ்விவரங்களை என்னல் எழுதப்பட்டுள்ள "சாமுத்ரிகா லக்ஷண பலன்கள்" என்னும் புத்தகத்தில் விரிவாகக் காணலாம். அதில் இவ்விஷயங்களை வெகு தெளிவாக எழுதியிருக்கிறேன்.

போடவேண்டும் என்றும், சூரியன் ஒன்பது கோடியே லக்ஷத்து ஐம்பத்திராயிரம் யோசனை சுற்றளவும் இரண்டு குரோசம் விஸ்தாரமுமுள்ள பூமண்டத்தை ஒரு க்ஷணத்தில் சுற்றி வருகிறான் என்றும் சொல்லுகிறார்கள். இவர்களே கணிதம் தெரியாமல் பலன் சொல்வது மஹா பாவம் என்று கூறுகிறார்கள்; பத்திரிகைகளிலும் எழுதுகிறார்கள். சூரியன் சுற்றவில்லை என்ற உண்மை இப்பொழுது பள்ளியில் பயிலும் சிறுவர்களுக்கும் தெரிந்த விஷயமாயிருக்கிறது. அதை சாமான்ய ஜோதிஷர்களில் பலர் ஒப்புக்கொள்வதில்லை. இவர்கள் மனம் இதற்கு இடம் தருவதில்லை. என்னே இவர்கள் ஆராய்ச்சியும் கணித ஞானமும்!

முன் காலத்தில் வானசாஸ்திர ஆராய்ச்சி இப்பொழுதுள்ள அவ்வளவு முன்னேற்ற மடைந்திருக்கவில்லை. இதனால் நம் முன்னோர்கள் அவ்விஷயத்தில் அதிக காலத்தைச் செலவழித்துச் சிரமப்பட வேண்டியிருந்தது. அவர்கள் உலகத்தில் பல விடங்களுக்கும் சென்று சமுத்திர யாத்திரை முதலியவைகளைச் செய்து வான சாஸ்திர உதவியினால் கிரஹங்களைப்பற்றிப் பல விஷயங்களையும் கண்டறிய முயற்சிக்கவில்லை. இப்படி செய்வது பாபம் என்று நினைத்தார்கள். பிறந்த விடத்திலேயே வாழ்வது பேரின்பமென்று கருதினார்கள். தர்மாசார சீலர்களாய் பகவத் பக்தியுடன் ஜெனித்த விடத்திலேயே வாழ்ந்து வந்தார்கள். இதன் காரணமாக அவர்களுக்கு ஒரு ஜாதகத்தின் லக்னத்தை நிர்ணயிப்பதற்கு எவ்வளவோ சிரமப்பட வேண்டியிருந்தது.

நெருப்பை உண்டாக்கச் சிக்கிமுக்கிக் கல்லைக் கையாண்டுவந்த காலத்திற்கு எவ்வளவோ காலம் முன்னிருந்தே ஜோதிஷ சாஸ்திரம் இருந்துவந்துள்ளது.

ஆகையால் ஜாதக பலன்களைச் சொல்வது அவர்களுக்கு
சிரமமேயில்லை. ஆனால் வான சாஸ்திர முறைப்படி ஜாதக
கணிதம் செய்வதுதான் அவர்களுக்கு மிகவும் சிரமமாக
விருந்தது. சில வருஷங்களுக்கு முன்வரையில் கூட கிரா
மங்களில் ஒரு குழந்தை பிறந்தால் அந்த நேரத்தைப் பக
லில் சூரியனது உதவியாலும் சாயையைக் கொண்டு அடி
அளந்து பார்த்தும் இரவில் நக்ஷத்திரங்களின் உதவி
யாலுமே ஜனன டயத்தை நிர்ணயித்து வாந்தார்கள்.
இதுபோல் நாழிகையறியும் அவ்வழக்கம் இப்பொழுது
கூட அபூர்வமாய்ச் சிலவிடங்களிலிருக்கிறது. அவ்வாறு
அறிந்து சொல்லத்தக்கவர்கள் ஜனன சமயத்தில்
பக்கத்திலிராவிடினும், வானம் மப்பும் மந்தாரமாயிருப்பி
னும் இம் முறையில் எவ்வளவு சிரமமும் சந்தேகமுமிருக்கு
மென்பதைப் பாருங்கள். அப்படிப்பட்ட சமயங்களில்
பெற்றோர்கள் தோராயமாகச் சொல்லும் நேரத்தைக்
கொண்டே ஜோதிஷர்கள் ஜாதகத்தைக் கணித்து வந்த
னர். அதனால் சுமாராய்த்தான் லக்ன நிர்ணயம் செய்யக்
கூடுமென்பது சொல்ல வேண்டுவதில்லை.

அவ்வளவு தோராயமாய்க் குறித்த ஜாதகங்களைக்
கொண்டே அவர்கள் தங்கள் பாண்டித்ய பலத்தாலும்,
அனுபவ ஞானத்தாலும் நம் முன்னோர்கள் பலன்களைக்
கூடியவரையில் சரியாகச் சொல்லிவந்தார்கள். அவர்
களில் சிலர் நிமிஷக் கணக்கில் நடக்கப்போகிற பலனையும்
தெளிவாக தெரிவித்து வந்தார்கள். ஆனால் இப்படிப்
பலன் சொல்வது சில சமயங்களில், ஏமாற்றத்தைக்
கொடுத்து வந்தது. ஏனெனில், ஒரு குழந்தை ஜனன
மானால் அந்த நேரத்தை நிர்ணயிக்கச் சுமார் 10 நிமிஷமா
வது கணக்குப் போடவேண்டி யிருந்தது. இப்படித்
தாமதமாவதனால் சில சமயம் ஒரு லக்கின அந்தத்தில்



பிறந்த குழந்தையின் லக்னம் அடுத்த லக்னமாக மாறி
விடவும் கூடும். ஆகவே அவர்கள் இதுபோன்ற மாறுபாடு
கள் நேரிடாதிருப்பதற்காகச் சில கட்டுப்பாடுகளை அனு
சரித்தார்கள், ஏற்படுத்தியுள்ளார்கள். கிருதயுகத்தில்
கர்பாதான லக்னம் பிரதானம்; திரேதாயுகத்தில் சிரோ
தயம் ஆதாரம்; துவாபர யுகத்தில் ஜலோதயம் முக்யம்;
கலியுகத்தில் பூபதனம் போதுமானது என்று ஏற்படுத்தி
யிருக்கிறார்கள். அவர்கள் ஸத்யம் தர்மம் தவறாதவர்
களாய் சதாகாலமும் சாஸ்திர ஆராய்ச்சி செய்து வந்தார்
கள். அந்த நல்லுழைப்பினாலும் அவர்கள் ஆத்மானுபவ
மும் பகவதனுக்கிரமும் உடையவர்களாயிருந்ததனாலும்
அவர்கள் சொல்லும் பலன்கள் சரியாயிருந்தன.

பூர்வத்தில் சகல சாஸ்திரங்களும் கர்ண பரம் பரை
யாக வாய்ச்சொல்லாகவே குருமுகேண போதிக்கப்பட்டு
வந்தன வென்றும், பிறகு காலக் கிரமத்தில் எழுத்துக்
களைக் கற்பனை செய்து பெரிய பாறைகளிலும், கல்தூண்
களிலும், செப்புத் தகடுகளிலும் ஓலைச் சுவடிகளிலும்
எழுதி வைத்துள்ளார்கள் என்றும் சரித்ர ஆராய்ச்சியால்
தெரியவருகின்றன. அப்படிப்பட்ட அந்த காலத்திலும்,
அனேக வகையான சாதனங்களும் நிபுணர்களும் நிறைந்
துள்ள இந்த காலத்திலும், வான சாஸ்திர ஆராய்ச்சியில்
பலவித அபிப்பிராய பேதங்களுண்டு. இன்னமும்
இது தீர்ந்த பாடில்லை. அவற்றுள் சூரியன் பூமியைச்
சுற்றுகிறதா, பூமி சூரியனைச் சுற்றுகிறதா என்பதும்
ஒன்றாகும். இக்காலத்திலும் கூட இந்த சந்தேகம் சிலரை
விட்டபாடில்லை. இது மிகவும் வருந்தத் தக்கதாகும்.
மேல் நாட்டு ஆராய்ச்சி முறைகளால் பூமி தான் சூரி
யனைச் சுற்றுகிற தென்பதும், சூரியனுக்குச் சலன
மில்லை என்பதும் தெளிவாக்கப்பட்ட விஷயங்களாகும்.

கணித) பஞ்சாங்கங்களும் மலிந்துள்ள இக்காலத்தில் ஜோதிஷர்கள் வான சாஸ்திர ஆராய்ச்சியில் தமது மூளையை அதிகமாகக் குழப்பிக் கொண்டு கஷ்டப்பட வேண்டிய அவசியமில்லை. தற்காலத்தில் ஜோதிஷர்கள் மேல் நாட்டு முறைப்படி ஜனன கால வேளையை நிர்ணயம் செய்து கொண்டு ஜாதக பலன்களைச் சொல்வது தான் சிறந்தது. நான் அம்முறைப் படியே தான் ஜாதகங்களை கணித்துப் பலன் சொல்லி வருகிறேன். பலன்கள் சரியாக இருக்கின்றன. நாம் அதிகமாக ஆராய வேண்டியது இக்காலத்தில் ராஜயோக தசாயோக பல நிர்ணய சாஸ்திரமேயாகும். இக்காலத்தில் பொது ஜனங்களுக்கு ஜோதிஷரிடம் வெறுப்பு ஏற்படுவதற்கு அதிக காரணம் ஜோதிஷர்கள் அர்த்த மில்லாமல் வெறும் கணக்கைப் போட்டுக் கொண்டு போவதும் பக்கம் பக்கமாய் இலக்கங்களை நிரப்புவதும் பலன்களை நிச்சயித்துக் கூற முடியாமல் திகைப்பதுமேயாகும். அப்படி அநாவசியமான சிரமமின்றி ராசி நவாம்சம் இவைகளை மாத்திரம் சரியாக இக்கால முறைப்படி நிர்ணயமாக நிச்சயித்துக் கொண்டாற் போதுமானது. ஜோதிஷர் பலபாக சாஸ்திரங்களை நன்றாய்க் கற்றுத் தேர்ந்தவராயும் அனுபவ முள்ளவராயுமிருப்பின் ராசிநவாம்ச சக்கிரங்களைக் கொண்டே ஜாதக துவாதச பாவபலன்களையும் சரியாகச் சொல்லி விடலாம். இதையனுஸரித்து, தசா புக்திகளின் பலனையும் சரியாக நிர்ணயஞ் செய்து அவற்றின் ஆதாரங்களைக் கொண்டே சகல பலன்களையும் சரியாகச் சொல்லி விடலாம். ஆகையால் தற்காலத்தில் கணித பாகப்படிப்பைவிட ஜோதிஷர்களுக்கு பலபாக சாஸ்திரப்படிப்பே மிகவும் முக்யம்.

உதாரணமாக பஞ்சாங்கங்கள் என்பவை நன்றாகச் செய்தமைக்கப்பட்ட வீணைகள் போன்றவை. ஜோதிஷ

ராகிய நாம் அவ்வீணையைப் பயன் படுத்துபவ ராவோம். (பஞ்சாங்கங்களுள் இக்கால வான சாஸ்திர முறைப்படி கணிக்கப்படுகிற திருக்கணித பஞ்சாங்கமே கூடியவரை பல நிர்ணயத்திற்குச் சிறந்ததாகும் என்பது என் அபிப்பிராயம். இது பலரும் அங்கீகரிக்கக் கூடியதென்றே நான் நினைக்கிறேன்.) வீணையின் மகத்வம் விஞ்ஞானத்தின் பெருமை அதை வாசிப்பவராலே தான் விளங்குகிறது. இதில் வீணை செய்யும் கிரமம் வேறு; அதை வாசிக்கும் முறைவேறு. பஞ்சினால் துணியுண்டாகிறது. பஞ்சை உற்பத்தி செய்வது வேறு; அதைத் துணியாக்குவதற்குச் செய்ய வேண்டிய வேலைகள் வேறு. மோட்டார் செய்பவருடைய வேலை வேறு; அதை ஓட்டுவது வேறு. இப்படியுள்ளதில், பஞ்சாங்க கணிதம் செய்வதற்கான கிரமம் வேறு; அதைக் கொண்டு ஜாதகம் கணித்து கிரகங்களின் கதியை அனுஸரித்துப் பலன் சொல்வதென்பது வேறு. இரண்டிலும் ஒருவரே தேர்ந்தவராக இருப்பது அபூர்வம். இதில் ஏதேனும் ஒன்றில் தான் ஒருவர் விசேஷத் தேர்ச்சியுடையவராக விருக்க முடியும். இதைப் போன்றது தான் வான சாஸ்திர ஆராய்ச்சி செய்து பஞ்சாங்கங்களை கணிப்பதும், அதை அனுஸரித்து ஜாதகங்களுக்கு பலன் சொல்வதுமாகும். எனவே இவ்விஷயத்தின் தாரதம்யத்தை சகலரையும் அறிய வேண்டுகிறேன். இதில் ஜாதக பலன் சொல்லும் ஜோதிஷன் வீணைவாசிப்பவனையும், துணி நெய்பவனையும் மோட்டார் ஓட்டு பவனையும் போன்றவனாவான். ஜாதக பலன் சொல்லும் பழக்கமும் திறமையும் ஒரு தனிக்கலையாகும். இது பழக்கப்பட்டு வரவேண்டுமேயல்லாது, புத்தகப் படிப்பினால் மாத்திரம் வந்துவிடக் கூடியதல்ல. உதாரணமாக ஒருவர் ஒரு மெஷினைப் பற்றிய



சகல நுட்பங்களையும் அதை ஓட்டுவதற்கான சகல கிரமங்களையும் புத்தகத்தில் படித்து, பரீக்ஷையும் எழுதி பாஸ் செய்திருக்கலாம். இப்படிப்பட்டவர் மெஷினை ஓட்டிப் பழகாதவராக விருப்பின், இதனால் யாதொரு ப்ரயோஜனமும் கிடையாது. இப்படிப்பட்டவர் பேசும் புத்தகத்தைப் போன்றவராவார்.

இதைப் போலவே மற்றொருவர் மெஷினைப் பற்றி அதிகமாக படித்து பாஸ் செய்யாதவராக விருக்கலாம். அவர் மெஷினை ஓட்டிப் பழகி அனுபவம் பெற்று தேர்ந்தவராக விருப்பின் இப்படிப் பட்டவரால் முந்தியவரைவிட அபாரமான அனுகூலம் உண்டு. இதைப் போன்றது தான் படிப்பு மாத்திரமிருந்து அனுபவமிராததற்கும், அனுபவம் மாத்திரம் விசேஷமாயிருந்து அதிக படிப்பிராததற்கு முள்ள வித்தியாஸம்.

இவை இரண்டுமே எந்த கல்விக்கும் கலைக்கும் மிகவும் அவசியமாக வேண்டியவை தான். இவ்வாறுள்ளதில் படிப்பும் அனுபவமும் ஒருங்கே யாரிடம் பொருந்தி நன்றாக வமைந்திருக்கின்றதோ அவர்கள் தான் இதில் விசேஷக்ஞர்கள்.

இதைப் போன்றது தான் விசேஷமாக ஜோதிஷப் படிப்பு மாத்திரமிருந்து அனுபவமிராததற்கும் உபாயமான படிப்பைக் கொண்டு ஜாதக பலன் சொல்லி அனுபவத்தில் பழக்கப்பட்டு தேர்ச்சி யடைந்துள்ளவர்களுக்குமுள்ள வித்தியாஸம். இவ்விரண்டிலும் யார் நன்றாக தேர்ந்தவர்களாக விருக்கின்றார்களோ, இவ்விரண்டும் யாரிடம் ஒருங்கே நன்றாக வமைந்துள்ளதோ அவர்கள் தான் உத்தம ஜோதிஷர்களாவார்கள். இதை யறிந்து ஜோதிஷக் கல்வியை முறைப்படி கற்றுத் தேர்ந்து ஜோதிஷர்கள் நற்பலனடைவார்களாக.

ராகிய நாம் அவ்வீணையைப் பயன் படுத்துபவ ராவோம். (பஞ்சாங்கங்களுள் இக்கால வான சாஸ்திர முறைப்படி கணிக்கப்படுகிற திருக்கணித பஞ்சாங்கமே கூடியவரை பல நிர்ணயத்திற்குச் சிறந்ததாகும் என்பது என் அபிப்பிராயம். இது பலரும் அங்கீகரிக்கக் கூடிய தென்றே நான் நினைக்கிறேன்.) வீணையின் மகத்வம் விஞ்ஞானத்தின் பெருமை அதை வாசிப்பவராலே தான் விளங்குகிறது. இதில் வீணை செய்யும் கிரமம் வேறு; அதை வாசிக்கும் முறைவேறு. பஞ்சினுல் துணியுண்டாகிறது. பஞ்சை உற்பத்தி செய்வது வேறு; அதைத் துணியாக்குவதற்குச் செய்ய வேண்டிய வேலைகள் வேறு. மோட்டார் செய்பவருடைய வேலை வேறு; அதை ஓட்டுவது வேறு. இப்படி யுள்ளதில், பஞ்சாங்க கணிதம் செய்வதற்கான கிரமம் வேறு; அதைக் கொண்டு ஜாதகம் கணித்து கிரகங்களின் கதியை அனுஸரித்துப் பலன் சொல்வதென்பது வேறு. இரண்டிலும் ஒருவரே தேர்ந்தவராக இருப்பது அபூர்வம். இதில் ஏதேனும் ஒன்றில் தான் ஒருவர் விசேஷத் தேர்ச்சியுடையவராக விருக்க முடியும். இதைப் போன்றது தான் வான சாஸ்திர ஆராய்ச்சி செய்து பஞ்சாங்கங்களை கணிப்பதும், அதை அனுஸரித்து ஜாதகங்களுக்கு பலன் சொல்வதுமாகும். எனவே இவ்விஷயத்தின் தாரதம்யத்தை சகலரையும் அறிய வேண்டுகிறேன். இதில் ஜாதக பலன் சொல்லும் ஜோதிஷன் வீணைவாசிப்பவனையும், துணி நெய்பவனையும் மோட்டார் ஓட்டு பவனையும் போன்றவனுவான். ஜாதக பலன் சொல்லும் பழக்கமும் திறமையும் ஒரு தனிக்கலையாகும். இது பழக்கப்பட்டு வரவேண்டுமேயல்லாது, புத்தகப் படிப்பினுல் மாத்திரம் வந்துவிடக் கூடியதல்ல. உதாரணமாக ஒருவர் ஒரு மெஷினைப் பற்றிய



சகல நுட்பங்களையும் அதை ஓட்டுவதற்கான சகல கிரமங்களையும் புத்தகத்தில் படித்து, பரீக்ஷையும் எழுதி பாஸ் செய்திருக்கலாம். இப்படிப்பட்டவர் மெஷினை ஓட்டிப் பழகாதவராக விருப்பின், இதனுல் யாதொரு ப்ரயோஜனமும் கிடையாது. இப்படிப்பட்டவர் பேசும் புத்தகத்தைப் போன்றவராவார்.

இதைப் போலவே மற்றொருவர் மெஷினைப் பற்றி அதிகமாக படித்து பாஸ் செய்யாதவராக விருக்கலாம். அவர் மெஷினை ஓட்டிப் பழகி அனுபவம் பெற்று தேர்ந்தவராக விருப்பின் இப்படிப் பட்டவரால் முந்தியவரைவிட அபாரமான அனுகூலம் உண்டு. இதைப் போன்றது தான் படிப்பு மாத்திரமிருந்து அனுபவமிராததற்கும், அனுபவம் மாத்திரம் விசேஷமாயிருந்து அதிக படிப்பிராததற்கு முள்ள வித்தியாஸம்.

இவை இரண்டுமே எந்த கல்விக்கும் கலைக்கும் மிகவும் அவசியமாக வேண்டியவை தான். இவ்வாறுள்ளதில் படிப்பும் அனுபவமும் ஒருங்கே யாரிடம் பொருந்தி நன்ருக வமைந்திருக்கின்றதோ அவர்கள் தான் இதில் விசேஷக்ஞர்கள்.

இதைப் போன்றது தான் விசேஷமாக ஜோதிஷப் படிப்பு மாத்திரமிருந்து அனுபவமிராததற்கும் உபாயமான படிப்பைக் கொண்டு ஜாதக பலன் சொல்லி அனுபவத்தில் பழக்கப்பட்டு தேர்ச்சி படைந்துள்ளவர்களுக்குமுள்ள வித்தியாஸம். இவ்விரண்டிலும் யார் நன்ருக தேர்ந்தவர்களாக விருக்கின்றுர்களோ, இவ்விரண்டும் யாரிடம் ஒருங்கே நன்ருக வமைந்துள்ளதோ அவர்கள் தான் உத்தம ஜோதிஷர்களாவார்கள். இதை யறிந்து ஜோதிஷக் கல்வியை முறைப்படி கற்றுத் தேர்ந்து ஜோதிஷர்கள் நற்பலனடைவார்களாக.